கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு
வான வூர்தி * யேறினண் மாதோ
௨00. கானமர் புரிகுழற் கண்ணகி தானென்.

---

வெண்பா.

[1] தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழூந்தகைமை † திண்ணிதாற்—‡ றெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.

---

கட்டுரை.

[1] § முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர்

குலத்தோ

ரறனு மறனு மாற்றலு மவர்தம்
[2] பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்

ரு. விழவுமலி || சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்

குடியுங் கூழின் பெருக்கமு மவர்தம்
வையைப் பேரியாறு வளஞ்சுரந் தூட்டலும்

பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலு
மாரபடி சாத்துவதி யென்றிரு விருத்தியு
நேரத் தோன்றும் வரியுங் குரவையு
** மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் †† தனிக்கோ ளிலைமையும்
வடவாரியர் ‡‡படைகடந்து
தென்றமிழ்நாடொருங்குகாணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
னரைசு கட்டிலிற் §§ றுஞ்சிய பாண்டிய
னெடுஞ்செழியனோ டொரு பரிசா
நோக்கிக் கிடந்த
மதுரைக் காண்ட முற்றிற்று.

---

## இரண்டாவது, மதுரைக்காண்டம் முற்றிற்று.

---

'தெய்வந்'—மண்ணகமாதர் - உலக்த்துக் கற்புடைமகளிர். விண்ணக மாதர்க்கு விருந்தானள்; ஆதலால் தெய்வந்தொழூகை திண்ணிதென்க.

---

[1] குறள், ௫௫. [2] புறநானூறு, ௩௫. [3] "பழவிறன்மூதூர்" மணி. ௭: ௯௯.
(பி - ம்.) * 'எறிவன்கானமர்' † 'திண்ணமாதி' ‡ 'தெய்வமா, மண்' § 'முடியுடை' ‖ 'சிறப்பின் வானவர் வரவும் வையைப்பேரியாற்று' ** 'என்றிவ வினைத்தும்' †† 'தன்கோள்' ‡‡ 'படைதந்து' §§ 'துஞ்சிய நெடுஞ் செழியனொ டொருபரிச'.

# மூன்றாவது
# வஞ்சிக்காண்டம்.



## உச. — 1 குன்றக்குரவை.

2 உரைப்பாட்டுமடை.

குருவியோப்பியுங் கிளிகடிந்துங்
குன்றத்துச்சென்று *வைகி
யருவியாடியுஞ் சுனைகுடைந்து † மலவுற்று
வருவேமுன்
மலைவேங்கை நறுநிழலின் வள்ளிபோல்வீர்
மனநடுங்க
முலையிழந்து ‡ வந்துநின்றீர்
யாவிரோவென முனியாதே
ரு. மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந்
துருத்தகாலைக்

கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன் யானென்று
னென்றலு மிறைஞ்சியஞ்சி யிணைவளைக்கை யெதிர்கூப்பி
நின்ற § வெல்லையுள் வானவரு நெடுமாரி மலர்பொழிந்து
குன்றவருங் கண்டு‖நிற்பக் கொழுநனொடு கொண்டுபோயின
ரிவள்போலு ¶ நங்குலக்கோ ரிருந்தெய்வ மில்லையாதலிற்

க. குன்றத்துச்சென்று தங்கிக்குரவையோப்பியுமென்க.

௩. வள்ளி - வல்லி; தங்கள் வள்ளியென்கின்ற பெண்ணுமாம்; என்றது, குமரவேள் தேவியை.

௪. நின்றீர், யாவிர் இவை உயர்த்துக் கூறினர். முன்னியாதே - அவர்கள் கேட்டதற்கு வெறுதே.

௫. மணமதுரை கலியாணமதுரை.

௬. போயினர், முற்று. முன் தேவருடன் போனபடியை விரியக்கூறினது இது.

[1] குன்றக்குரவை: நற். உஎகூ; அகநா. உகஉ; முருகு. கஅசு-எ; மதுரை. சுகஓ; மலைபடு. ௩உ௦-உஉ; திருச்சிற். கஉஎ.

[2]. உரைப்பாட்டுமடை - உரையாகிய பாட்டை இடையேயுடையது: சிலப்.

ப. சசக.

[3] மணமதுரை - நறுமணத்தையுடைய மதுரையுமாம்; (சிலப். கங: கசஇ - கக பார்க்க); "நன்றவிழ் பன்மலர் நாற நறைபளிப்பத்,தென்ற லசைவருஉஞ் செம்மற்றே யம்மதின், குன்றத்தாற் கூடல் வரவு" (பரி. அ.) மணமதுரையோடரசகேறே; "ஒட் டேனரசோ டொழிப்பேன் மதுரையும்' சிலப். உக. நள.

(பி - ம்.) * 'வைகியுமருவி' † 'அலவுற்றம் வருவேம்' ‡ 'வந்துநின்ற நீரியாவிரோ' § 'எவ்விலபில்' ‖ 'திற்கவே கொழுநனொடுங்கொண்டு' ¶ 'நங்குலத்துக்கோரிரு'

கரு



* சிறுகுடியீரே சிறுகுடியீரே
தெய்வங்கொள்ளுமின் சிறுகுடியீரே
நிறங்கிள ரருவிப் பறம்பின் றாழ்வரை
நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே
தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
[1] கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்
[2] குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்

[3] பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை † நிறுமின்
[4] பரவலும் பரவுமின் ‡ விரவுமலர் தூவுமி

னொருமுலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே

கொளுச்சொல்

ஆங்கொன்று காணா யணியிழா யீங்கிதுகா
ணஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியற்
சிந்துரச் சுண்ணஞ் செறியத்தூய்த் தேங்கமழ்ந்
திந்திர வில்லி னெழில்கொண் டிழுமென்று

---

கரு. பறம்பின்றாழ்வரை-நெடுவேள்குன்றமாகிய பறம்பின் தாழ்வரையில்.

கச-ரு. வேங்கைக்கீழ் ஒரு தெய்வமாகப் பண்ணிக்கொள்ளுமின்.

கசு. தொடுத்தல் - வாசித்தல்.

கஎ. கோடு - கடமாக்கொம்பு. கொடுமணி - ஓசைகடிதான மணி.

கஅ. காப்பு-சுற்றுமதில் கடை-வாயில். சுற்றுமதிலிட்டுவாசலும்செய்ம்மின் (உஉ.) வளந்துஞ்சாது சுரக்கவென்று (உக) நங்கைக்குச்...(கஅ) செய்ம்மி னென்று முன்னே கூட்டுக.

கொளுச்சொலென்றது, மேற்சொல்லுகின்ற மூன்று பாட்டின் சொற்களைப் போதர்.........இப்பாட்டின் கருத்தென்றுமாம்

“ஆங்கொன்று”—ஆங்கொன்று காணாயென்றது, தூரநின்று. கிட்டச்

சென்று, ஈங்கிதுவென்றாள். இதுவென்றாள், கண்ணகி அங்கேவந்தளவிலே மழைபெய்தலால் விழுகிற அருவியை. அவ்வருவிதூங்கக்கண்டு தங்களையணுக வந்தபடியே. ... ... ... செறிய - செறியாநிற்க. ஆடுதுமே: ஏகாரம்,

---

[1] "கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி" முருகு. ௨௪௯.
[2] "நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி" முருகு. ௨௩௯.
[3] பூப்பலி: "மலர்ப்பலிதூஉய்", "பூப்பலிசெய்துகாப்புக்கடைநிறுத்தி" (சிலப். ௨௮: ௫, ௨௧௧); "பூப்பலிவிட்டகடவுளை" கலி. ௯௫.
[4] "பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்" குறிஞ்சி. ௫.
[5] "அஞ்சனத் திரளு மணியரி தாரமும்" சிலப். ௨௫ : ௪௦.
(பி-ம்) * 'சிறுகுடீரே' † 'திறத்துமின்' ‡ 'விரைமலர்'.

## ௨௪.—குன்றக்குரவை.

௫௧௫

வந்தீங் கிழியு மலையருவி யாடுதுமே

யாடுதுமே தோழி யாடுதுமே தோழி

[1] யஞ்சலோம் பென்று நலனுண்டு
*நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி யாடுதுமே
எற்றொன்றுங் காணேம் புலத்த லவர்மலைக்
கற்றீண்டி வந்த புதுப்புனல்
கற்றீண்டி வந்த புதுப்புனன் மற்றையா
ருற்றாடி னோந்தோழி நெஞ்சன்றே

என்னென்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
பொன்னாடி வந்த புதுப்புனல்
பொன்னாடி வந்த புதுப்புனன் மற்றையார்
முன்னாடி னோந்தோழி நெஞ்சன்றே

யாதொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
போதாடி வந்த புதுப்புனல்
போதாடி வந்த புதுப்புனன் மற்றையார்
மீதாடி னோந்தோழி நெஞ்சன்றே

### பாட்டுமடை

உரையினி மாதரா யுண்கண் சிவப்பப்
புரைதீர் புனல்குடைந் † தாடினோ மாயி
னுரவுநீர் மாகொன்ற ‡ வேலேந்தி யேத்திக்
குரவை தொடுத்தொன்று § பாடுகம்வா தோழி

---

தேற்றம். அவன் கொடுமை கிடக்கச்செய்தேயும் அவனுடைய மலையருவியை ஆடவேண்டிற்றேயென்றாள். அஞ்சலோம்பு – அஞ்சுதலைப் பரிகரி.

"எற்றொன்றும்"—..........................அவர் செய்த கொடுமையால் நாம் அவர்மலையின்வந்த புதுப்புனலோடு புலத்தற்குச்சிறிதும் காரணமில்லை. மற்றையாரென்றது, அருவி யாடுவாருள் தன்னையொழிய முன் அந்நீரிற் குளித்த மகளிரை. தனக்கு முற்படவாடினவரோடு நெஞ்சுதான் வேறுபட்டுப் புலத்தற்குக் காரணம் என்னென்றாள். அன்றேயென்றது, இசைநிறைக்கிளவி.

"என்னொன்றும்"—எவனொன்றும், விகாரம்.

'எற்றொன்றும்' என்பதுமுதலாக மூன்றும் சிறைப்புறம்; தோழிக்குத் தலைமகள் சொல்லியது; முன்னிலைப்புறமொழியுமாம்.

"உரையினி"—உரையினி – இனிச்சொல்.

---

1 "பெண்டிர் நலம்வௌவித் தண்சாரற் றாழ்ந்தொழுகும், வண்டிற் றுறப்பான் மலை"

கலி. சுo.

[5] "உரவுநீர் மாகொன்ற, வெண்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார் கொல்" கலி. உள.

(பி - ம்.) *'நல்காதார்' †'அடிஎம்' ‡ 'வேலேத்தி' § 'பாடுதும்யாம், பாட்டு, மடை சீர்கெழு'



சீர்கெழு [1] செந்தி லுஞ் செங்கோடும் வெண்குன் று
[2] மேரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
[3] பாரிரும் பெளவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே

அணிமுகங்க ளோரா று மீரா று கையு
* மிணையின்றித் தா னுடையா னேந்திய வேலன்றே
பிணிமுகமேற்
மணிவிசும்பிற்

கொண்டவுணர் பீடழியும் வண்ண
கோனேத்த மா றட்ட வெள்வேலே

† [4] சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா
ர றுவர்
திருமுலைப்பா லுண்டான்
‡ வருதிகிரி கோலவுணன்

றிருக்கைவே லன்றே

மாபமப பிளந்து
[5] குருகு பெயர்க்குன்றங் கொன்ற
நெடுவேலே

"சீர்கெழு"—செந்தில் - திருச்சேந்தில். செங்கோடு - திருச்செங்கோடு. வெண்குன்றம் - சுவாமிமலை. ஏரகம் - ......சூர் மா - சூரனாகியமா. சுடரிலைய; அ, இடைச்சொல்; சுடரிலை வேல், இறைவன் வேலெனக.

"அணிமுகங்கள்"—இவ்வடிவு பிறர்க்கு இல்லாமையாற் பிறரொப்பில்லாதான். [5] பிணிமுகம் - மயில்.

"சரவண"—சரவணப்பூம்பள்ளியறை-சரவணப் பொய்கையில் தாமரையாகிய பள்ளியறை. அறுவர்-கார்த்திகையார். திகிரிகோலவுணன் - மலையைச் சூழவரும் அவுணன். பிளந்து - பிளக்க. குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்ச பருப்பதம். [பாயது.

"சீர்கெழுசெந்தில்" முதலிய மூன்றும் வரைவுமுடிவதாகத் தெய்வம்

---

[1] "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பு" (முருகு. கஉ௫); முருகன் நீம்புன லலைவாய்",("டையுண்மாலை"தொல். களவு. சூ. உ௩-ந: மேற்.)"திருமிகு விளக்கி னலைவாய்ச் செருமிகு சேய்" (அகநா. உ௬௬); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, நெடுவேளிலைஇய காமர் வியன்துறை" (புறநா. ௫௫); "நஞ்செந்தின்மேய வள்ளிமணாளற்குத் தாதைகண்டாய்" (தே. மறைக்காடு)

[2] ஏரகம்: "ஏரகத் துறைதலு முரியன்" (முருகு. க௯௧) என்றவிடத்து ஏரகம் - மலைநாட்டகத்ததொருதிருப்பதியென்றார், நச்சினார்க்கினியர்; பத்து. ப. ௪உ - பார்க்க.

[3] "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" (முருகு. ௪௫ - ௬); "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு" (பரி. ௫);"பார்முதிர் பனிக்கடல்" பாகவத. ௬: கிருத்தமன். ௫0.

[4] சரவணப்பூம்பள்ளி: "நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை,......அறுவர் பயந்த வாறமர் செல்வ" (முருகு. உ௫௩ - ௫); "கடவு ளொருமீன் சாலினி யொழிய, வறுவர் மற்றையோரும்......நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப், பயந்தோரென்ப பதுமத்துப் பாயல்" பரி. ௫.

§ "குருகுபெயர்க் குன்றங் கொன்றான் மடவன்" (சிலப். உச); "குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து, மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை" (பரி. ௫); "குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து" (முருகு. உசுசு); "குருகுபெயர்க் குன்றங் கொன்றோன்" (மணி. ௩ : கசு); "குருகுபெயர்க் குன்றத் துடல்பக வெறிந்த, நெடுவேற் கடவுட்கு" கல். "பொருப்புவலன்"

* 'பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" (கல். ஏ.) பிணிமுகம்-முருகக்கடவுள் ஊரும் யானையுமாம்; "சேயுயர் பிணிமுக மூர்ந்து" (பரி. ௫); "பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. ௫௬); "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. உசஎ);

(பி -ம்.) * 'இளையன்றி' † 'சரவணப் பள்ளியிலைசத்தாய்மார்' ‡ 'வருதிகிரிபோலவுணன் மார்பம்' 'திகிரியோனவுணன்'

## உச.—குன்றக்குரவை.

(ஙிகள

பாட்டுமடை

இறைவளை நல்லா யிதுநகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க
வறியாண்மற் றன்னை யலர்கடம்ப னென்றே
வெறியாட ளுன்விரும்பி வேலன்வரு
கென்றாள் *

ஆய்வளை நல்லா யிதுநகை யாகின்றே
மாமலை வெற்பனோய் தீர்க்கவரும் [1] வேலன்
வருமாயின் வேலன் மடவ னவனிற்
குருகு பெயர்க்குன்றங் கொன்றான் மடவன்

செறிவளைக்கை நல்லா யிதுநகையா கின்றே
வெறிகமழ் வெற்பனோய் தீர்க்க

[1] வேலன மடவ னவனினுந் தானமடவ
[2] னாலமர் செல்வன் புதல்வன் வருமாயின்

நேரிழை நல்லாய் நகையா மலை [3] நாடன்
மார்பு † தருவெங்நோய் தீர்க்க வரும்வேலன்
தீர்க்க வரும்வேலன் றன்னினுந் தான்மடவன்
[4] கார்க்கடப்பந் தாரெங் கடவுள் வருமாயின்

பாட்டுமடை

வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து
நீலப் பறவைமே னேரிழை தன்னோடு
மாலமர் செல்வன் புதல்வன் வரும்வந்தான்
[5] மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே

---

'இறைவளை நல்லாய்' முதல், 'என்றியாம்பாட' இறுதி அறத்தொடுநிலை.

"செறிவளை"—வெற்பனோய் - வெற்பனால்வந்த நோய்.

"வேலனார்"—நீலப்பறவை - மயில்.

---

[1] "வேலன் வேண்ட வெறிமனை வந்தோய், கடவு ளாயினு மாக, மடவைமன்ற வாழிய முருகே" நற். கசா.

[2] "ஆலமர் செல்வன் புதல்வன்வரும்" (சிலப். உச); "ஆலமர் செல்வ னணிசாறல் பெருவிறல்", "ஆலமர் செல்வ னணிசான் மகன்" (கலி. அக, அரு); "ஆல்கெழு கடவுட் புதல்வ" (முருகு. உகூசு); ஆலமர் செல்வன் மகன்" மணி. ரு : கசஅ.

[3] "நாடன் மார்புதர வந்த படர்மலி யருநோய்" நற். கசா.

[4] கார்க்கடப்பந்தார் - கார்காலத்திற்குரிய கடம்பின்மாலை : "கார்கோள் முகந்த ......இருள்படப் பொதுளிய பராஅரை மராஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்" (முருகு. ௭ - ௧௧) "கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி......முருகே" (நற். ௩௪); "கார் நறுங் கடம்பின்......தெரியல், சூர்நவை முருகன்" (புறநா. ௨௩); "காரலர் கடம்பன்" மணி. ௪. ௪௧.

[5] "மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே" சிலப். ௨௪; "பாடுகம்வா" (பி - ம்.) * 'பாட்டுமடையாய்வளை' † 'தருநோய்தீர்'



கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதல்
மயிலியன் மடவரன் மலையர்தம் மகளார்
* செயலைய மலர்புரை திருவடி தொழுதே
மயன்மண மொழி

† யரு ளவர்மண மெனவே
மலைமகள் மகனைநின் மதிநுதன் மடவரல்

குலமலை யுறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுணின் னிணையடி தொழுதேம்
[1] பலரறி மணமவர் படுகுவ ரெனவே
குறமக ளவளெம குலமக ளவளொடு
மறுமுக வொருவநின் னடியிணை தொழுதேந்
[2] ‡ துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்

பெருகநன் மணம்விடு பிழைமண மெனவே

பாட்டுமடை

[3] என்றியாம் பாட மறைநின்று கேட்டருளி
மன்றலங் கண்ணி மலைநாடன் போவான்முன்
சென்றே னவன்றன் றிருவடி கைதொழுது
நின்றே னுரைத்தது கேள்வாழி தோழி

"கயிலை"—மகனே: ஐ, இடைச்சொல். அயன்மணம் - பிராசாபத்தியம். ஒழி - இதனை விலக்குவாய்.

"மலைமகள்"—பலரறிமணமென்றார், இதற்குமுன்பு களவாதலால். படுகுவர் - உடன்படுகுவாராக. அவரென்றது தலைவனை.

"குறமகள்"—துறை- நீர்த்துறை; [4] "யாறுங்குளனும்" என்றாராதலின். நின் திருவடிதொழுகரென்றது, சூளுற்றதலைவனை.

"என்றியாம்"—மறைநின்று - மறையச் சிறைப்புறமாகநின்று. சென்றேன் - சென்றுநின்றேன்; நின்றேன் - நின்றநான்.

---

[1] "நேரிறை முன்கைபற்றி நுமர்தர,நாட்டி நன்மண மயர்கம்"(குறிஞ்சி.உகக-உ); "பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து" நாலடி. அகூ.

[2] "ஆலமுங்கடம்பு நல்யாற்று நடுவுங், கால்வழக் கறுநிலைக்குன்றமும் பிறவு,மவ்வவைமேய வேறுவேறு பெயரோ, யெவ்வயி னோயு நீயே" (பரி - ச); "துறையு மாலமுந் தொல்வலி மராமு, முறையுளி பராஅய்" (கலி - கoக.)

[3] "குன்றக்குரவையுள், 'சீர்கெழுசெந்தில்' என்னுந்தாழிசைமுதற் பல அடுக்கி வந்து பின்னர், 'என்றியாம், பாட......கேட்டு' என்று அடக்கியற் பொருள்பெற்று முடிந்தவாறு காண்க." தொல். செய். சூ. சசகூ - ந.

[4] திருமுருகாற்றுப்படை, உஉச.

(பி - ம்.) * 'செயலைமென்' † 'அருள்பலர்மணம்' ‡ 'துறையுறைநின்னை திருவடிதொழுமவர்பெறுக'

கடம்பு சூடி யுடம்பிடி யேந்தி
மடந்தை பொருட்டால் * வருவ திவ்வூ
ரறுமுக மில்லை யணிமயி லில்லை
குறமக ளில்லை செறிதோ ளில்லை
கடம்பூண் டெய்வ மாக நேரார்
மடவர் மன்றவிச் சிறுகுடி யோரே

பாட்டுமடை.

என்றீங்

கலர்பாடு பெற்றமை யானுரைப்பக் கேட்டுப்
புலர்வாடு நெஞ்சம் † புறங்கொடுத்துப் போன
மலர்தலை வெற்பன் வரைவானும் போலு
முலையிழந்தா மாமதுரை கோளிழைத்தாள் காதற்
றலைவனை வானோர் ‡ தமராருங் கூடிப்
பலர்தொழு பத்தினிக்குக் காட்டிக் கொடுத்த
நிலையொன்று பாடுதும் யாம்

[1] பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகம்
பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகங்
கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுகந்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுங்கால்
[2] மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே

"கடம்பு"—இப்படிச்சூடி ஏந்தி இவ்வூர் வருவது, தன்னை முருகனென்று கண்டார் கருதுதல்வேண்டி......இச்சிறுகுடியோர் தெய்வமாக உடன்படார். ஆதலால், அறியார்; மடவர்-அறியார். அன்றி, இச்சிறுகுடியோராதலால்,...... சொல்லுமாறு: அறுமுகமில்லை; அணிமயிலில்லையென்று சொல்லுவார்களென்று வேறுகாட்டினாள்: தலைமகன் கடம்புசூடி உடம்பிடியேந்தித் தன்னைக் குமரனென்று பிறர்கருதவந்த காரணம், [3] "பண்டைத்தன் மணங்கமழ்தெய்வத்திளநலங் காட்டி" என்றாராதலால்.

"அலர்பாடு"—புலர்வாடுநெஞ்சம்-புலருநெஞ்சம். புறங்கொடுத்துப்போன-தன்பின்னே கிடக்கப்போன; ஒழியப்போனவென்றுமாம். தமராரும் கூடி-தமரெல்லாருங்கூடி. நிலை - தன்மை.

"பாடுகம்"—அத்தன்மையினை நாம் பாடுமிடத்து இதனை வேண்டிக் கொள்ளுவோமென்றார்.

---

[1] "பாடுகம் வாவாழி தோழி" கலி. ௪௧.
[2] "மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே" சிலப். ௨௪; "வேலனார்வந்து"
[3] திருமுருகாற்றுப்படை, ௨௮௯-௯0

(பி - ம்.) * 'வருவதிவ்வூர்க்கடம்பூண்......குடியோரே யறுமுகமில்லையணி...... இல்லை' † 'புறக்கொடுத்து' ‡ 'தமராகக்கூட்டிப்'

பாடுற்றுப்
பத்தினிப் பெண்டிர் பரவித் தொழுவாளோர்
பைத்தர வல்குனம் பைம்புனத் துள்ளானே
பைத்தர வல்குல் கணவனை வானோர்க
ளுய்த்துக் * கொடுத்து முறையோ வொழியாரே
வானக வாழ்கை யமரர் தொழுதேத்தக்
+ கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை ‡ மறுதரவோ வில்லாளே

மறுதர வில்லாளை யேத்திநாம் பாடப்
[1] பெறுகதில் லம்ம § விவ்வூரு மோர்பெற்றி
பெற்றி யுடையதே பெற்றி யுடையதே
பொற்றொடி மாதர் கணவன் மணங்காணப்
பெற்றி யுடையதிவ் வூர்

என்றியாங்
கொண்டு நிலைபாடி யாடுங் குரவையைக்
கண்டுநங் காதலர் || கைவந்தா ரானா
துண்டு மகிழ்ந்தானா வைகலும் வாழியர்
வில்லெழுதிய விமயத்தொடு
[2] கொல்லி யாண்ட [3] குடவர் கோவே.

உச.—குன்றக்குரவை முற்றிற்று.

பாடுற்று - பெருமையுற்று.

"பத்தினி"—வானோர் கொடுத்தபின்பும் அவளைப் புகழலொழியார்.

"மறுதரவு"— மறுதரவு-மீட்சி. இவ்வூரும் ஒருவிரதம்பெறுக. கணவன் மணம் – வரைவு.

"கொண்டுநிலை"—* கொண்டுநிலை-பொருளைக் கொண்டுநிற்குநிலை. கைவந்தார் - அவன் பிரசாதத்தாலே நம்வழியிலே புகுந்தார். உண்டு - வீரபானத்தையுண்டு. ஆணுவைகஞெறும் வாழ்வாளுக.

இவ்வுறுப்புக்களையுடைய கோச்சகப்பாத் தலைமகட்குத் தோழிவரைவு கூறியது.

---

[1] "பெறுகதிலம்மயானே" குறுந். கச.

[2] "கொல்லிப் பொருந" (பதிற். எக); "முன்னூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வில், லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா - உ0கூ); "ஓங்கு கொல்லியோ ரடுபொருந" (புறநா. உஉ) என்பவற்றாற் கொல்லிமலை சேரபரம்பரையினர்க்குரித்தா தல்காண்க.

[3] "குடவர் கோவே கொடித்தேரண்ணல்" பதிற். இஇ.

[4] கொண்டுநிலை - ஒருவகைச் செய்யுளென்பர்; "குரவை தழீஇயா மாடுங் குரவையுட், கொண்டுநிலை பாடிக்காண்" (கலி. நகூ.) என்பதன் உரையைப்பார்க்க.

(பி - ம்.) * 'கொடுத்தவுரை' † 'கானனறு' ‡ 'மறுதரவோ' § 'இவ்வூர் பெற்றியுடையதே' ‖ 'கைவந்தா, ருண்டு'

# இருபத்தைந்தாவது

# காட்சிக்காதை.



[1] மாநீர் வேலிக் கடம்பெறிந் [2] திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்
[3] திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளித்
[4] துஞ்சா முழவி னருவி யொலிக்கு
மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப்
* பைந்தொடி யாயமொடு பரந்தொருங் கீண்டி
[5] வஞ்சி முற்ற நீங்கிச் செல்வோன்
வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்
பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பு

---

௧. மாநீர் வேலிக் கடம்பு - இருண்டநீரை வேலியாகவுடைய கடம்பு.

௨. இலவந்தி - நீராவி.

௩. இளங்கோவேண்மாள் - பெயர்; 'நன்னன்வேண்மாள், உதியன் வேண்

மான்' என்பனபோல; வேண்மாளுடனிருந்து, இளங்கோவை அருளிப்பாடிட்டென்றுமாம.

[1]. கடம்பெறிந்தவை: "வலம்படு முரசிற் சேரலாதன், முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமையத்து, முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து", "சால்பெருந் தானைச் சேரலாதன், மால்கட லோட்டிக் கடம்பறுத் தியற்றிய, பண்ணமைமுரசு" (அகநா. ௧௨௭, ௩௪௭); "பலர் மொசிந் தோம்பிய திரன்பூங் கடம்பின், கடியுடை முழுமுத றுமிய வேஎய், வென்றெறி...சேர லாத", "அரசுதலை பணிப்பக், கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே", "மாக்கட லிக்கிக், கடம்பறுத் தியற்றிய, வலம்படு வியன்பணை... தொடித்தோளியவ", "இருமுந்நீர்த் துருத்தியுள், முரணியோர்த் தலைச்சென்று, கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பி, னெடுஞ்சேர லாதன்" (பதிற். ௧௧, ௧௨, ௧௭, ௨௦)

[2]. இமயத்து விற்பொறித்தமை: "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்து" (சிலப். ௨௫: ௧௧௮); 'இமயம் விற்பொறித்து' (பதிற். ௨-ஆம் பத்துப்பதிகம்) "ஆரியரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் வஞ்சி" (அகநா. ௩௯௬.)

[3]. "வதுவை வேண்மாண் மங்கல மடந்தை" சிலப். ௨௮: ௫௧.

[4]. "முழவின்னிசைமூரிமுழங்கருவி" சீவக. ௧௧௯௯

[5]. "வளந்தலைமயங்கிய வஞ்சி முற்றம்" சிலப். ௨௫: ௩௪.

(பி - ம்) * 'பஞ்சடியாயமொடு'





மிலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவு
மரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி
யொருநூற்று நாற்பதி யோசனை * விரிந்த
பெருமால் களிற்றுப் பெயர்வோன்
போன்று
கோங்கம் வேங்கை தூங்கிணர்க்

கொன்றை
நாகந் திலக நறுங்கா ழார
† முதிர்பூம் பரப்பி னொழுகுபுன
லொளித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் ‡ பாட
[1] நெடியோன் மார்பி லாரம் § போன்று
பெருமலை விலங்கிய பேரியாற்
றடைகரை
யிடுமண லெக்க ரியைந்தொருங் கிருப்பக்

குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியுந்
தினைக்குறு வள்ளையும் புனத்தெழு
விளியு
நறவுக்கண் ணுடைத்த குறவ ||
ரோதையும்
[2] பறையிசை யருவிப் பயங்கெழு
மோதையும்
புலியொடு பொரூஉம் புகர்முக
வோதையுங்
[3] கலிகெழு மீமிசைச் சேணோ ணோதையும்

கச. அரங்கு - நாடகசாலை. பள்ளி - மண்டபம்.

(ரு) செங்குட்டுவன் (எ) மலைகாண்குவமென்றுசொல்லி (கரு) பெயர்வோன்போன்று.

(கக) இந்திரன்

கஉ - கூ. பூங்காமுதலானவற்றை யானைமேலுளவாகநிருமித்து.

(கஅ) களிற்றிலே (கஉ - ச) இவற்றைப் பரப்பி (கரு) பெயர்வோனென்க.

(கஅ) கோங்கமுதலியனவுதிர்ந்த (கக) பூம்பரப்பாற் புனல் ஒளித்து.

உஉ. மலையைவிலங்கியாறு; பேர்யாறு; இஃது ஓர்யாற்றின்பெயர்.

உரு. எக்கர் - எக்கரிடத்து. இயைந்தொருங்கிருப்ப - மூவருங்கூடியிருப்ப.

உடு. செவ்வேள் வேலன் - செவ்வேளுடைய வேலன்; வேலன் - படி

ருo. சேணோன் - பரணின்மேலோன். [மத்தான்.

---

[1] "மாயோன்மார்பி ஞாரம் போல" தொல். செய். சூ. கடு, எஅ-பேர். மேற்.

[2] "பறையிசை யருவி முன்னூர்ப் பொருந", "பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந". (புறநா. கஉரு, உஉரு); "பறைக்குர லருவி" பதிற். எ0.

[3] "கலிகெழுமரமிசைச்சேணோன்" குறிஞ்சி. ச0

(பி - ம்.) *"விலங்கு பருமால் களிற்றிற் பெயர்வோன்' † 'முதுபூஞ்செம்மலி லொழுகுபுனல்' ‡ 'ஆர்ப்ப' § 'போலப்' ‖ 'ஓதையும் புலியொடு'

உடு.—காட்சிக்காதை.

பயம்பில்வீழ் யானைப் பாக ரோதையு
மியங்குபண்ட யரவமோ டியாங்கணு மொழிப்ப
வளர்துகடை யறியா வருங்கலஞ் சுமந்து
வளர்தலை மயங்கிய வஞ்சி * முற்றத்
திறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறைசுமந்து † நிற்குந் தெவ்வர் போல
யானைவெண் கோடு மகிலின் குப்பையு
மான்மயிர்க் கவரியு மதுவின் குடங்களுஞ்
சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியு
[1] மஞ்சனத் திரளு மணியரி தாரமு
மேலை வல்லியு மிருங்கறி வல்லியுங்
[2] ‡ கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையுந்
§ தெங்கின் பழனுந் தேமாங் கனியும்
[3] பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களுங்
காயமுங் கரும்பும் பூமலி கொடியுங்
|| கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையி னிருங்கனித் தாறு

மாளியி னணங்கு மரியின் குருளையும்
வாள்வரிப் பறழு மதகரிக் களபமும்

---

---

௬௧. பயம்பு - யானையைப்படுக்குங்குழி. ௬௨. ஒலிப்ப - ஒலியாநிற்க.

௬௩. 'அளந்துகடை யறியா' என்பது முதல் திறையிடுவார்க்கு அடை.

௬௮. மான்மயிராகிய வெண்சாமரை. மதுவின்குடம் - தேன்குடம்.

௭௨. கூவை நூறு - கூவைக்கிழங்கினீறு.

௭௩. பைங்கொடிப்படலை - பச்சிலைமாலை.

௭௫. காயம் - வெள்ளுள்ளி. பூமலிகொடி - பூங்கொடி.

௭௮. அணங்கு - குட்டி.

௭௯. வாள்வரி - புலி. கரிக்களபம் - யானைக்கன்று.

---

[1]. "அஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியல்" சிலப். ௨௪. "ஆங்கொன்று":—

[2]. "நூறெடு குழீஇயின கூவை" (மலைபடு. ௧௩௯); "பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்" பெருங். ௧. ௫௩: ௨௩.

[3]. "பைங்கொடி—பச்சிலைக்கொடி; எல்லாவற்றினும் பசுத்திருத்தலிற் பச்சிலை யென்று பெயர் பெற்றது; பச்சிலையென்றது சினைவினை முதன்மேலேற்றிப் பைங் கொடி யென்றார்" (முருகு. ௧௯௰-௩) என்பது ஈண்டு அறியற்பாலது.

(பி - ம்.) * 'மன்றத்து' † 'நிற்குமன்னர்' ‡ 'கூவைநீறும்', 'கூலக்கிழங்குங்கொடி' 'தெங்கம்பழமும்' || 'கருந்தாட்கமுகின்'



குரங்கின் குட்டியுங் [1] குடாவடி யுளியமும்
[2] வரையாடு வருடையு மடமான் மறியுங்
காசறைக் கருவு மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையு நாவியின் பிள்ளையுங்
கானக் கோழியுந் * தேன்மொழிக் கிள்ளையு
[3] மலைமிசை மாக்க ளலைமிசைக் கொண்டாங்
[4] கேழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றங்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற † மன்னொடுங் கூடி

வானவர் போற்ற வானகம் பெற்றனை
ளெந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்க ணினைப்பினு மறியேம்
பன்னூ றாயிரத் தாண்டுவா ழியரென
மண்களி நெடுவேள் மன்னவற் கண்டு

---

௫௦. குடாவடியுளியம் - பிள்ளைக்கரடி; திசைச்சொல்; கரடிக்குட்டி. ௫௨. காசறைக்கரு - கத்தூரிக்குட்டி. ௫௧. மண் - கணவன்.

---

1. குடாவடி—வளைந்த அடிகளையுடையது; மலைபடு. ௫௦௧-௩.

2. வரையாடுவருடை-மலையிற் பாய்ந்து விளையாடுகின்ற வருடைமான்; "சிலம்பு பாய்வருடையொடு", "குன்றின்மேல்வருடை பாய்ந்துழக்கவின்" (சீவக. ௧௨௧௭, ௧௭௧௧); வருடைக்குக் கால்கள் முதுகிலுமுள்ளனவென்றும் கால்கள் எட்டென்றும் வேறு நூல்களால் தெரிகின்றன; "பீலிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரைவாழ் வருடை வன்றலை மாத்தகர்" (மலைபடு. ௫௦௨-௯) என்பதனுரையின் அடிக்குறிப்பைப் பார்க்க; "எட்டுக் காலுடையன வருடை; ஆறுகாலுடையன கழிப்பாம்பு" நீல. தரும. செய். ௫௪-உரை.

3. ௫௫-௯௦. சிலப்பதிகாரம், பதி. ௩-௮.

4. ௧௭-௯௪. "குழிப்படு வேழக் கன்றுப் பிரட்டையும், வரைப்படு தேனுஞ் சினைப்படு கனியும், வீணைத் தண்டும் வேய்படு முத்தும், கானத் தகிலு மேனத் தெறியும், பொறிப்புலித் தோலு மறுப்பிய வாகமு, மந்திப் பிணையொடு மற்றவை பிறவுந், தந்திறை தந்து முந்து சிறைப் பட்ட, வற்ற காலத்து முற்ற நோக்கி, யடியுறை செய் தொழிற் குடிமுதல் பிழைத்த, விருதிலம் பெயரினு மெம்மாட் டிலவெனப், பெருமகன் றமரொடு தெளிவனர் தேற்றி" பெருங். க. ௫௪: ௮௩-௯௩; 'மலைப்படுகடாம், ௫௦௦-ஆம் அடி முதலியனவும் இத்தப் பகுதியை ஒத்துள்ளன.

(பி - ம்.) * 'தேமொழி' † 'தன்மகிழநனைடுகூடின வென்றுட்டாள்', 'கூடிப் போயினனெந்நாட்'

## ௨௫.—காட்சிக் காதை.



௯௫. [1] கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த

[2] தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கு

மொண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாந்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்

[3] தீவினைச் சிலம்பு காரண மாக

வாய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்

சிலம்பொடு சென்ற சேயிழை வழக்குஞ்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்

வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
யஞ்சி லோதி யறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டது
* மரிமா னேந்திய வமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
5 றயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்

---

சுடு. கண்களிமயக்கம் - கண்களித்தற்குக்காரணமான ஆச்சரியம்; மயக்கம் - கண்டாரை மயங்கப்பண்ணுதல்.

சுசு - ரு. காண்டலின், விசாரமில்லேமென்று.

(கூகூ) வேடர்சொன்னவளவிலே (கூஎ) உற்றதையெல்லாம் (கூக) ஒழிவின்று (கூகூ) உரைக்குமெனக; உரைக்குமென்றது, முற்று.

கூக. தீவினைச்சிலம்பு - இவர் தீவினை பலித்தற்குக்காரணமான சிலம்பு.

(எ0) உற்றதும், (எஉ) வழக்கும், (எஎ) சுட்டதும் சொல்லியென ஒரு சொல் வருவிக்க.

அ0 - அக. இணர்க்கோதை - கண்ணகி. பொருளுய்மயங்கினளே.

அஉ. தலைத்தாணெடுமொழி - கண்ணகிசொல்லிய வீரமொழி; மரித்தபடியால், அவள்சொல்லியது முடியக்கேட்டிலள்.

---

1. "கண்களி கொன்றுங் காட்சியை" சிலப். உகூ; எக.

2. "அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்" சிலப். பதி. க0.

3. "சூழ்வினைச் சிலம்பு காரண மாக" சிலப். பதி. இஅ.

4. "அரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன், திருவீழ் மார்பிற் றென்னவர் கோவே" சிலப். உ0: உஉ-க.

5. "தயங்கிணர்க் கோதை" மணி: எ. க00.



கலக்கங் கொள்ளாள் * கடுந்துயர் பெருஅண்

மன்னவன் [1] செல்வுழிச் செல்க யானெனத்

அரு. தன் னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற்

[2] பெருங்கோப் பெண்டு மொருங்குடன் † மாய்ந்தனள் . கொற்ற வேந்தன் கொடுங்கோற் றன்மை

யிற்றெனக் காட்டி யிறைக்குரைப்
பனள்போற்
றன்னுட் டாங்கட் டனிமையிற் செல்லா
௩௦. ணின்னுட் டகவயி னடைந்தன ணங்கை ‡
யென்
றெழிவின் றுரைத்தீண் டூழி யூழி

[3] வழிவழிச் சிறக்கநின் வலம்படு
கொற்றமெனத்
தென்னர் கோமான் றீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தின னுரைப்போ
௩௫. னெம்மோ ரன்ன § வேந்தற் குற்ற

செம்மையி || னிகந்தசொற் செவிப்புலம் படாமு

[4] னுயிர்பதிப் ¶ பெயர்த்தமை
யுறுக வீங்கென
[5] வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது

---

அரூ. கலக்கங்

கொள்ளாளென்றார், கடுகமரித்தாளென்றதுதோன்ற.

அஅ. இறை, முன்னிலைப்பெயர்.

கரு. எம்மோரன்னவென்றது, உட்கோள்.

கரு - எ. பாண்டியனது உயிரை உடம்பினின்று கடுகச்சென்றுற வேண்டுமென.
நீக்கினமை இப்பொழுது

கக. ஆக்கியது, முற்று.

---

[1]. மெய்யீற்று முன் உயிர்வருங்கால் உடம்படுமெய்யன்றெனப்படும் வகரம் தோன்றுமென்பதற்கு, 'செல்வுழிச் செல்க' என்பது மேற்கோள்; நன்-வி. சூ. கசுக.

[2]. எஅ-அக. "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா தின்னுயி ரீவர்......பத்தினிப் பெண்டிர்" (மணி. உ: சஉ-அ) என்பது இவ்வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலது.

[3]. "வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்" மதுரை. கசுச.

[4]. உயிர்பதிப் பெயர்த்தல் - உயிரை உடம்பினின்றும் நீக்குதல்; "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்ததும்," (சிலப். உஎ: அக); "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" மணி. கசு: கரு.

[5]. கூஅ - க. "வளைகோ விழுக்கத் துயிராணி கொடுத்தாங், கிருநில மடந்தைக்குச் செங்கோல் காட்ட" சிலப். உஉ: ச-ரு.

(பி - ம்.) * 'கடுந்துயருருள்மன்னன்' † 'அமர்ந்ததும்' ‡ 'எனவொழி' § 'வேந்தர்க்கிற்றெனச்' || 'இழந்தகோல்செவி' ¶ 'பெயர்த்தமை'

மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சங்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
[1] மன்பதை காக்கு நன்குடிப் பிறத்த
றுன்ப மல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பந் * துணிந்துவந் துரைத்த
[2] நன்னூற் புலவற்கு நன்கன முரைத்தாங்
குயிருடன் சென்ற வொருமக டன்னினுஞ்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினு

நன்னுதல் வியக்கு நலத்தோ ரியாரென
மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி

காதலன் றுன்பங் காணாது † கழிந்த

மாதரோ பெருந்திரு வுறுக ‡ வானகத்
தத்திற நிற்கநம் மகனா டடைந்தவிப்

பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென

௧௧௫. மாலை வெண்குடை மன்னவன் விரும்பி

நூலறி புலவரை நோக்க வாங்கவ

ரொற்கா மரபிற் பொதியி லன்றியும்
[3] விற்றலைக் கொண்ட வியன்பே §

ரிமயத்துக்

---

[1] ௧௦௧. பிழையுயிரெய்தின் - உயிர்கள்

யாதானுமொன்றால் வருந்தின்.

௧௦௩. துன்னிய துன்பம் - கண்ணகிக்குத் துன்னிய துன்பத்தை.

௧௦௪ - ௫. தொழுதகவில்லென வந்துரைத்த.

௧௦௯. நன்னுதல், முன்னிலைப்பெயர். ௧௧௧. காதலன் - பாண்டியன்.

௧௧௨ - ௪. மாதர் - அவன்தேவி; அவள் வானிலே திருவுறுக; அதுகூற வேண்டா; இவளைக்கொண்டாடவேண்டுமென்று தேவிசொல்ல.

௧௧௬. [2] நூலறிபுலவர் - அமைச்சர்.

௧௧௭ - ௨௧. இமயக்கல்லுக்குக்கங்கை; பொதியிற்கல்லுக்குக் காவிரி.

---

[1] "ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான், றருமந்தன் வழிச் செல்கை கடனென்று தன்மைந்தன், மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்த, னருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோ தான்" பெரிய. திருவாரூர். ௪௪.

[2]. நன்னூற்புலவன்—சாத்தனார்; மணிமேகலைநூலாசிரியர்.

[3]. "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர், கற்கொண்டு பெயருமெங் காவலன்" (சிலப். ௨௫:௧௮௩-௪); "கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டி" பதிற். ௫-ஆம் பத்துப் பதிகம்.

*. "நாலவர்பாகமாக" ஞளா. மந்திர. எ.
(பி • ம்.) * 'துனைந்து' † 'காந்த' ‡ 'வானத்,' § 'இமயத்தங்'



கற்கால் கொள்ளினுங் கடவு * ளாகும்
கங்கைப்பேர் யாற்றினுங் காவிரிப் புனலினும்
தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப்
பொதியிற் குன்றத்துக் † கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தன்
‡ மறத்தகை நெடுவா ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉஞ் § செய்கையோ வன்று
புன்மயிர்ச் சடைமுடிப் [1] புலரா வுடுக்கை
முந்நூன் || மார்பின் முத்தீச் செல்வத்
திருபிறப் பாளரொடு பெருமலை யரசன்

மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்
¶ கடவுளெழுதவோர் கற்றா ரானெனின்

வழிநின்று பயவா மாண்பில் வாழ்க்கை
[2] கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியு

முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை
மதிமுடிக் களித்த [3] மகட்பாற் காஞ்சியுக்

தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
[4] நின்றெதி ரூன்றிய நீள் [5] பெருங் காஞ்சியு

கஉஅ. இருபிறப்பாளர் - தேவவிருடிகள்.

கஉஅ - கூ0. பார்ப்பாருடனே மகட்டருதனைக்கி இருபிறப்பாளரோடு கல் தாராயினென்றான். கரு0. [6] எழுத - பண்ண.

கருக - உ. நிலைநின்று பயன்படாத வாழ்க்கையை மரித்தோர் இருந்தோர்க்குக் காட்டிய நிலையாமையும்.

கருச. மதிமுடி - தேவன். மகட்பாற் காஞ்சி - தான் இனியனுக்கொடுத்த காஞ்சியும். [தான்.

கருடு - சு. தென்றிசைக்கண்ணே மேற்செலவு. அவன் எதிருன்றலையுயர்த்

1. "ஒன்பது கொண்ட மூன்றுப்புரி நுண்ஞாண், புலராக் காழகம் புலர வுடீஇ" முருகு. கஅக-சு.

[3]. "கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்" (தொல். புறத்திணை. சூ. உச) என்பதையும் அதன் உரைகளையும் பார்க்க.

[4]. 'ஏந்திழையாட் டருகென்னும், வேந்தனொடு வேறுநின்றன்று' பு-வெ. ச: உச.

[5]. "எதிரூன்றல் காஞ்சி" : "வெட்சிநிரை கவர்தல்"—

[6]. "தாங்கு திறன்மறவர் தத்த மாற்றல், வீங்கு பெரும்படையின் வெளிப்படுத் தன்று" பு-வெ. ச: கூ.

[7]. "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்", "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (சிலப். உரு: ககூக; உகூ: கச); "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, வந்தி லெழுதிய வற்புதப் பாவை" "கடவுளெழுதிய, வந்திற்பாவை" (மணி: எ: கூச-ரு; கஉ: கக-ச.)

(பி - ம்.) * 'அருமெனக்கங்கை' † 'கற்கொண்டுபெயர்ந்தமுது' ‡ 'மறத்தகுதெவ்' § 'செப்பியோர்' || 'மார்பத்திமுத்தி' ¶ 'கடவுளாகவோர்'



[1] இலவுக்கதி ரணைந்த நீள்பெருஞ் சென்னி
யலர்மந் தாரமோ டாங்கயன் மலர்ந்த
வேங்கையொடு தொடுத்த விளங்குவிறன் மாலை
மேம்பட மலைதலுங் * காண்குவ லீங்கெனக்
[2] குடைநிலை வஞ்சியுங் [3] கொற்ற வஞ்சியு
நெடு [4] மா ராய நிலைஇய வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன் [5] பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பிற் [6] பெருஞ்சோற்று † வஞ்சியுங்
குன்றாச் சிறப்பிற் [7] கொற்ற வள்ளையும்
[8] வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்

கூஎ - சO. சென்னியிலே மந்தாரமாலையோடு வேங்கைப்பூ இடையிட்டுத் தொடுத்த மாலையைத் தான் டுவனென்பதாம்.]

சூடிவிற்கு மதுவுங் காண்பேன்; [அவையும் வெட்

கசகூ. வட்கர் போகிய - இடையில் முரியில்லாத;

நேரார் போலைக்

குக் காரணமாகிய போந்தையென்றுமாம்.

---

1. "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி" சிலப். உகூ: ௩௪.

2. குடைநிலைவஞ்சி-குடைநாட்கோடல்; "பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புல வர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று" பு-வெ. ௩:௧.

3. கொற்றவஞ்சி-அரசனது வெற்றியின் மிகுதி; "வையகம் வணங்க வாளோச் சினனெனச், செய்கழல் வேந்தன் சீர்மிகுத் தன்று" பு-வெ. ௩ : ௭.

4. மாராயவஞ்சி-அரசனாற் சிறப்பெய்துநிலை; "மாராயம் பெற்ற நெடுமொழி யானும்" (தொல். புறத்திணை. சூ. அ - இளம். ந.) "மறவேந்தனிற் சிறப்பெய்திய, விறல்வேலோர் நிலையுரைத்தன்று" பு-வெ. ௩:௧௧.

5. பெருவஞ்சி - பகைவர்நாட்டைக்கொளுத்தல்; "முன்னடையார் வளநாட்டைப், பின்னருமுட்டன் றெரிகொளீஇயன்று" பு-வெ. ௩ : உஉ.

6. பெருஞ்சோற்றுவஞ்சி - வீரர்களுக்குப் பெருஞ்சோறளித்தல்; "பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும்" (தொல். புறத்திணை. சூ. அ - இளம். ந); "திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப், பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று" பு-வெ. ௩: உ௧.

7. கொற்றவள்ளை - அரசன் பிரதாபத்தைக் கூறுவதுடன் பகைவர்நாடு அழிந்த தற்கு இரங்கல்; "குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்" (தொல். புறத்திணை. சூ.அ— இளம். ந); "மன்னவன் புகழ்கிளந், தொன்னார் நா டழிபிரங்கின்று" பு-வெ. ௩ : அ.

8. (க) "வட்கர் போகிய வளரிளம் போந்தை" (புறநா. ௧00.) (உ) கசகூ-எ. அர சர் தமக்குரிய அடையாளப் பூக்கள் முதலியவற்றுடன் புறத்திணைப் பூக்களையும் விர வித் தொடுப்பித்துத் தாம்சூட்டிக்கொள்ளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும் மரபு; இதனை, "பொலந்தோட்டுப் பைந்தும்பை, மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ", "வேம்பி னொண்டோளிர், நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து", "போந்தை, புச்சிக் கொண்ட வூசிவெண் டோட்டு, வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச், சுரியிரும் பித்தை பொலியச் சூடி" (புறநா. உஉ, எஎ, ௧00); "இளவரிக்கவட்டிலை யாரொடேர்பெறத், துளவியதும்பையுஞ் சுழியச்சூடினன்" (கம்ப. முதற்போர். ௧௧௭) என்பவற்றாலு முணர்க.

(பி - ம்.) * 'காண்குவ பீங்கெனக்கொடை' † 'வஞ்சியும்வட்கார்வான்பனைத் தோட்டென்பூட்கை'

புட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
[1] பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாண் மலைந்த வஞ்சிசூ டுதுமெனப்
பல்யாண்டு வாழ்கநின் கொற்ற மீங்கென

வில்லவன் கோதை வேந்தற் குரைக்கு
நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்
கொங்கர்செங் களத்துக் கொடுவரிக் கயற்கொடி

* பகைபுறத்துத் தந்தன ராயினு மாங்கவை
திகைமுக வேழத்தின் செவியகம் † புக்கன
கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்

‡ பங்களர் [2] கங்கர் பல்வேற் கட்டியர்
வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்
கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது

கசுo. கங்கைப் பேர்யாற்றுக் கடும்புன னீத்த
மெங்கோ மகளை யாட்டிய § வந்நா
ளாரிய மன்ன ரீரைஞ் ஞூற்றுவர்க்

கொருநீ யாகிய செருவெங் கோலங்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்ற

---

கசஎ. பூட்கை - மேற்கோள்; புட்கை, விகாரம்.

(கசக) 'குடைநிலைவஞ்சி' முதலாக, (கசச) 'பெருஞ்சோற்றுவஞ்சி' ஈரு கத் தன்சேனைக்குச் (கசஎ) சூட்டி.

கசஅ. பூவாவஞ்சி - கருவூர்.

கருo - ருக. 'பல்யாண்டு வாழ்க' என்று இனிச் சொல்லுகின்றான், வில்லவன்கோதையென்னுமந்திரி.

கருஉ. நும்மையொக்கும்வேந்தரென்றான், குலம்பற்றி.

கருரு - ரு. புலிக்கொடியும் கயற்கொடியும் பகைக்களத்திலே உனக்குத் தந்து ஓடினாராயினும் அவை எங்கும் பரந்து திக்கயங்களின் செவியகம் புக்கன.

கருஅ. தமிழ்ப்படைமயங்கிய செருக்களம்.

கருகூ. கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது - நீ நின்யானையை விட்டபடி என் கண்ணினின்றும் போகாது.

கசுக. எங்கோமகளென்றது, செங்குட்டுவன்மாதாவை; அவளை இவன் கொண்டுபோய்த் தீர்த்தமாட்டினதொருகதை.

கசுஉ - ச. ஆரியவரசராயிரவர்க்கு நீயொருவனுகச்செய்த போர்க்கோலங் கண்டது கூற்றமன்றே.

---

1. "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி" (சிலப். உசு : ரு0); "பூவா வஞ்சியுந் தருகு வன்" (புறநா. கூ‌உ); "பூத்த வஞ்சி பூவா வஞ்சியில்" மணி. உகு:எஅ.

2. கங்கர் கட்டியர் - தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு சிற்றரசர் மரபினர்; "நன்ன னேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" அகநா. சச.

(பி - ம்.) * 'டீகைப்புறத்து' † 'புக்கெனகொங்கர்' ‡ 'வங்களர்கங்கர்வல்வேற் § 'நன்னுள்'

# உரு.—காட்சிக்காதை.



[1] இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
[2] இதுநீ கருதினை * யாயி னேற்பவர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
இமய மால்வரைக் கெங்கோன் செல்வது
[3] கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்
வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாந்
தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் † கயற்புலி
மண்டலை யேற்ற வரைக வீங்கென
காவலந் தண்பொழி னண்ணு ரொற்றுநங்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா
வம்பணி யானை வேந்த ரொற்றே

தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றே
வறைபறை யென்றே [4] யழும்பில்வே
ளுரைப்ப
[5] நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து
கூடார் வஞ்சிக் கூட்டுண்டு சிறந்த
வாடா வஞ்சி மாநகர் புக்கபின்

---

கசுஅ. செல்வது - செல்லுகிறபடியை.

கசுகூ - எஉ. இமிழ்கடல்வேலியைத் தமிழ்நாடாக்கவேண்டி இமயத்தே கற்கால்கொளக்கருதின், ஏற்பார் யாரென்று அரசனுக்குச்சொல்லி ஓலையெழுதுகவென்றான்.

கஎக - உ. வில்லுக் கயல் புலி இவையிற்றினையுடைய இலச்சினைமண்ணேற்ற ஓலைகளை மன்னர்க்கெல்லாம் வரைகவென.

மேல் அழும்பில்வேள் கூற்று:—

கஎங - எ. நண்ணார் வரவிட்ட ஒற்றுப் பிரியா; ஆகையாலே அவ்வொற்றே அரசர்செவிக்கு அறிவிக்குந்தன்மையையுடைய; வடதிசைக்குச்செல்வு ஆணைமேல் இங்கே பறையறைய அடுக்குமென்றான். [பட்டு.

கஎஅ. பகைமேற்செல்பொழுது நிறுத்துதலரியதானை. நேர்ந்து - உடன்

கஎகூ - அ0. வஞ்சிக்கூட்டு - எடுத்துச்செலவாற்கொண்டதிறை; அதனாற் பொலிவுபெற்ற கருவூரிலே திரியச்சென்று புக்கபின்.

அரசன் போராற்றங்கரையினின்றும் போந்துபுக்கபினென்க.

---

1. சிலப். ரு: கூஎ; பதிற். உ: பதி; மணி. கஎ: கூஉ.

2. கசுகூ-எ. "இதுநீ கண்ணிய தாயி னிருநிலத், தியார்கொ லளியா தாமே" புறநா. இஉ. 3. மு : சிலப். உசு:கடுக.

4. "அழும்பில் வேளோ டாயக் கணக்கரை" (சிலப். உஅ: உ0கு); "பெரும்பூட் சென்னி, யழும்பி லன்ன வருஅ யாணர்" (அகநா. சச); "மானவிறல்வே, ளழும்பில்" மதுரை. ௩சச-ரு.

5. "நிறையருந்தானையொடு" மணி. கூ. உகூ.

(பி - ம்.) * 'ஆகவினெனிர்ப்பவர்' † 'கயல்புலிமண்டிலையொற்குவரு'

[1] வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதொ றாழி யுலகங் * காக்கென
[2] விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு † பெயருமெங் காவல னாதலின்
வடதிசை மருங்கின் மன்ன ரெல்லா
மிடுதிறை கொடுவந் தெதிரீ ராயிற்
[3] கடற்கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையுங்
கேட்டு வாழுமின் கேளீ ராயிற்
றோட்டுணை துறக்குந் துறவொடு வாழுமின்
றாழ்கழன் மன்னன் றன்றிரு ‡ மேனி
வாழ்க சேனு முகமென வாழ்த்தி
யிறையிக வியானை யெருத்தத் தேற்றி
யறைபறை யெழுந்ததா லணிநகர் மருங்கென்.

---

கஅக. 'வாழ்க' என்றதுமுதல் பறையறைகின்றார் வார்த்தை.

கஅச. எங்காவலன் பெயருமென்பதை முற்முக்கி ஆதலினென்க.

கஅகூ - க. எதிரேற்றுக் காணீராயின், கடலுட்புக்கும் மலையிலேறியும் உறைமினென்பார், இரண்டுவார்த்தையும் கேட்டுவாழுமினென்முர்.

[அவ்விடத்துப்படை அதன்புகழேயாதலான், அவ்விடங்களிற்செல்லாது

நன்டே உறைமினென்பார், அரசன் போர்கருதினதிசையிற் போம்படியைக் கேளீராயினென்ருர்.]

ககo. தோட்டுணை - மகளிர்; துறவு - தவம்.

கககக - உ. திருமேனியாகிய சேனுமுகம்; சேனுமுகம் அரசனுக்குச் சிறந்தமையின், 'திருமேனி' என்ருர்.

ககங. இறையிகலியானை - பட்டவர்த்தனம். ககச. பறை - பறையொலி. காட்சி - கற்கொள்ள மனத்தால் நிச்சயித்தல்.

## உரு—காட்சிக்காதை முற்றிற்று.

---

[1]. கஅக-உ. "வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை, ஊழிதோ றூழிதோ றுலகங் காக்க", "வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை, ஊழிதோ றூழி யுலகங் காக்கென", "ஊழிதோ றூழி யுலகங் காத்து, வாழ்க வெங்கோ வாழிய பெரிதென", "ஊழியோ ரூழி யுலகங் காத்து, நீவா ழியரோ" சிலப். கக: கஙு-கூ; உரு: கஅக-உ; உள: கககூ-சo; உஅ: கஅ௫-கூ.

[2]. "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்துக், கற்கால் கொள்ளினுங் கடவு ளாகும்" சிலப். உரு: ககஅ-கூ.

[3], சிலப்பதிகாரம், உக: அக-உ; உஅ: ககரு-கூ.

(பி - ம்.) * 'காக்கவில்' † 'பெயருங்காவலன்' ‡ 'மேனியாயசேனு'

# இருபத்தாறுவது

# கால்கோட்காதை.



அறைபறை யெழுந்தபி னரிமா னேந்திய
முறைமுதற் கட்டி லிறைமக னேற

வாசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ
மன்னர் மன்னன் வாழ்கென் றேத்தி
முன்னிய * திசையின் முறைமொழி கேட்ப
† வியம்படு தானை விறலோர்க் கெல்லா
முயர்ந்தோங்கு வெண்குடை யுரவோன் கூறு
¹ மிமையத் தாபத ரெமக்கீங் ‡ குணர்த்திய
வமையா வாழ்க்கை யரைசர் வாய்மொழி
நம்பால் § லொழிகுவ தாயி னாங்கஃ
தெம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர்தம் முடித்தலைக்
கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்

|| செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
• பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்

௩ - ௬. தானைத்தலைவர் தம்மொடு ஆசான் பெருங்கணி அருந்திறலமைச்சர்கூடி ஏத்திக் கேட்ப.

(எ) ஏவப்பட்ட தானைத்தலைவர்க்கெல்லாம் (அ) கூறுமென்க.

௯. தாபதர் - தீர்த்தமாட இமயத்தினின்றும் வந்த தாபதர்.

௰. அமையாவாழ்க்கை - நிரம்பாத உயிர்வாழ்க்கை ; பலமில்லாத வாழ்க்கையெனினுமாம். அங்குள்ள ஆரியமன்னர் சொன்ன வார்த்தை.

௧௧ - உ. நம்பால் ஒழிகுவதாயின் - அது நம்மிடத்தே கிடப்பதொரு

வார்த்தையாயின்; [அவர்க்குப் பலியாது] நம்மிடத்தே கிடந்துவிடிற் சோழ, பாண்டியரிடத்தில் இகழ்ச்சியுக்தரும்.

1. கூ-கரு. "தென்றமிழ்நாடாளும் வேந்தர்.........தங்கைதன்னை நீர்ப்படுத்து வெஞ்சினந்தரு வெம்மைநீங்கி" சிலப். உகூ: உரைப்பாட்டுமடை.

2. கஎ-அ. "பழியொடு படராஅப் பஞ்சவ வாழி", "படர்த்தெழு குருதி யடங்கா" சிலப். உ0: கூக; உகூ: கஉஎ.

(பி - ம்.) * 'திசைமென்முறைமொழி' † 'வியன்படு' ‡ 'உரைத்தவமையா § 'ஒழிவதாயின்' ‖ 'செருக்கழல் புனைந்தசெரு'



[1] * குடிநடுக் குறாஉங் கோலே னுகென
வார்புனை தெரியலு மலர்தார் வேம்புஞ்

சீர்கெழு மணிமுடிக் கணிந்தோ ரல்லா
லஞ்சினர்க் களிக்கு மடுபோ ரண்ணனின்
வஞ்சினத் தெதிரு மன்னரு முளரோ
விமைய வரம்பநின் னிகழ்ந்தோ ரல்ல
ரமைகநின் சினமென வாசான் கூற
[2] வா றிரு மதியினுங் காருக வடிப்பயின்
† றைந்து கேள்வியு மமைந்தோ
னெழுந்து

வெந்திறல் வேந்தே வாழ்கநின் கொற்ற
மிருநில மருங்கின் மன்ன ‡ ரெல்லாநின்
திருமலர்த் தாமரைச் சேவடி பணியு
௩௦. முழுத்த மீங்கிது முன்னிய திசைமே
லெழுச்சிப் பாலை § யாகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
[2] வாளுங் குடையும் வடதிசைப் பெயர்க்கென
வுரவுமண் சுமந்த வரசுத்தலை பணிப்பப்

---

௨௮. ஆகவென்று சொல்ல.

௨௯ - ௨௪. இமயவரம்ப! சோழபாண்டியரையல்லது நின்னை இகழ்ந்து கூறினரல்லர்; அடுபோரண்ணலே! நீ வஞ்சினங்கூறுதற்கு நின்னுடன் எதிர்க்கும் மன்னருமுளரோ; ஆதலால், நின்சினந்தணிகவென்றான்; இது புரோகிதன் வார்த்தை.

௨௫. ஆறிருமதியினும் - இராசி பன்னிரண்டிலும். காருகவடி - கிரகநிலை.

௨௬. ஐந்து கேள்வி - திதி வாரம் நக்ஷத்திரம் யோகம் கரணம்; நட்பு ஆட்சி உச்சம் பகை நீசக்கோளுமாம். அமைந்தவன் - [4] மௌத்திகன்.

௩௦ - ௩௧. இது [5] முழுத்தம்; எழும் பக்கத்தையாக வெனச் சொல்ல.

௩௪. உரவுமண் - உரத்தமண்.

---

1. 'சிலப்பதிகாரம், ௧௩: ௨௮-ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

2. 'வாளுங் குடையு மயிர்க்கண் முரசு, நாளொடு பெயர்த்து', 'மறமிகு வாளு மாலை வெண் குடையும், புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்தி'' (சிலப். ௫: ௯௧ - ௨; ௨௬: ௪௪-௫.) ''குடைநாட்கொளல் வாணாட்கொளல் குறியாவர சவுண, னுடைநாளழி வதி யார்தவ னரசென்றிய வாழிட், படைநாரணன் மகன்வெண்குடை பற்றக்குடை யேயப், படையாவமர் வுற்றாலன முடிமீக்குடை நிழல்'' தணிகைப். சீபரி. ௬௯.

3. ௨௫-௩௧ = முல்லைப்பாட்டு, ௫௫-௮

4. மௌகூர்த்திகன். 5. முகூர்த்தம்; இது முகிழ்த்தமெனவும் வழங்கும்.

## உசு.—கால்கோட் காதை.



பொருந ரார்ப்பொடு முரசெழூந் * தொலைப்ப
விரவிடங் கெடுத்த † நிரைமணி விளக்கின்
விரவுக்கொடி யடுக்கத்து நிரயத் தானையோ
[1] டைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
‡ வெம்பரி யானை வேந்தற் கோங்கிய
கரும வினைஞருங் கணக்கியல் வினைஞருந்
தரும வினைஞருந் தந்திர வினைஞரு
[2] மண்டிணி ஞால மாள்வோன் வாழ்கெனப்
பிண்ட முண்ணும் பெருங்களிற் றெருத்தின்
மறமிகு வாளு மாலைவெண் குடையும்
புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்
புரைதீர் [4] வஞ்சி போந்தையிற் றொடுப்போ
[5] னரைசுவிளங் கவைய § முறையிற் புகுதர

வரும்படைத் தானை யமர்வேட்டுக் கலித்த
பெரும்படைத் தலைவர்க்குப் * பெருஞ்சோறு வகுத்துப்
௫0. * பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வா ளொடுங் தகை மணிமுடிக் கணிந்து

---

௩௬. இரவிடங்கெடுத்த விளக்கிலேயென்றறி..................விடுகிறபடியாலே..........................

௩௭. [1] நிரயத்தானை - மாற்றார்க்கு நரக வேதனையைச் செய்யுந்தானை.

௪0. கருமவினைஞர் - புரோகிதர்.

௪௩. பிண்டமுண்ணும் பெருங்களிறு - .............பிண்டத்துக்குரிய களிறு; பட்டவர்த்தனம்.

௪௫. புகுத்தி - புகவிட்டு. ௪௬. தொடுப்போன் - சேரன்.

---

[1]. சிலப். ௫: கஙள; மணி. க: கள; பெருங். உ: ௫. கூ; ௯௯ ௯௯ கக. ௩; தொல். சொலி. ௬. ௫௭-௩. மேற்.

[2]. "மண்டிணிந்த நிலம்" புறநா. உ.

[3]. அரசர், தமக்குரிய அடையாளப்பூ முதலியவற்றோடு புறத்திணைக்குரிய பூ முதலியவற்றையும் விரவுவித்து அணிந்துகொள்ளுதல் மரபு: உ௫-ஆம் காதையிலுள்ள, ௪௫-௬-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

[4]. "அரசுவிளங் கவையத்து" சிலப். உ௬: ௬௫.

[5]. சிலப். உ௫: க௪௬ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; "பெருஞ்சோறுகுத்தற் கெறியுங், கடுஞ்சின வேந்தே" பதிற். ௬0.

[6]. சிலப். உ௫: க௪௮-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

[7]. "நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்" (குறுந். உ௫௮); "நிரைகளி றொழுகிய நிரையவெள்ளம்" பதிற். ௬௫.

(பி - ம்.) * 'ஞரட்ப' † 'மாமணி' ‡ வெம்பரித்தானை வேந்தர்க்கு' §'முறைமையிற்'

ஞாலங் காவலர் நாட்டிறை பயிரும்
[1] காலை முரசங் கடைமுகத் தெழுதலு
[2] நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
யுலகுபொதி யுருவத் [3] தயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடு * புனைந்
திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
† மறையோ ரேந்திய வாவுதி நறும்புகை
நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
[4] வாடக மாடத் தறிதுயி ‡ லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் § றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலி
னாங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
[5] நாடக மடந்தைய ராடரங் கியாங்கணுங்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே

---

௫௨ - ௩. அரசரிடுந்திறையை அழைக்கும் முரசம்.

௫௮. ஏந்திய - எடுத்த. புகை - அக்கினிகோத்திரம்.

௫௭ - ௮. அக்கினிகோத்திரங்களையும் நமக்கரித்து.

௬௨. ஆடகமாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரமென்பாருமுளர்.

(௬௦) ஏறினன் (௬௭) தாங்கினனாகிச் செல்வுழி.

௬௬. கூடையிற் பொலிந்து-குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை-இரட்டை ஒற்றைக்கை.

---

[1]. சிலப்பதிகாரம், ௧௭: ௩-௬ ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[2]. "நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி" சிலப். ௨௩: ௧௩௭.

[3]. ௩௩-௭. "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர் வலஞ் செயற்கே" புறநா. ௬.

[4]. "ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்" (சிலப். ௩௦: ௩௧); 'ஆடகமாடம்' இறை. சூ. ௨௬-மேற்.

[5]. "கழங்காடு மகளி ரோதை யாய்த்து, 'வழங்குதொடி முன்கை மலர வேந்தி, வானவன் வந்தான் வளரிள வனமுலை, தோணலமுணீஇய தும்பைப் போந்தையொடு, வஞ்சி பாடுதும் மடவீர் யாமெனு, மஞ்சொற் கிளவிய ரந்தீம் பாணியும்" சிலப், ௨௭: ௨௪௩-௩௦.

(பி - ம்.) * 'பொருந்தியிழைஞ்சாச்' † 'மறையோராகிய வாகுதி நறும்புகை நறைகெழுமாலை நல்லகம்' ‡ 'அமைந்தோன்' § 'எத்தநாட்க மடைந்தையர்'

## ௨௬.—கால் கோட் காதை.

௫௬௭

[1] வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோ
டோடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை * கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
[2] மாகதப் புலவரும் † வைதா ளிகருஞ்

சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த
* யானை வீரரு மிவுளித் தலைவரும்
வாய்வாள் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்
வானவன் போல வஞ்சி நீங்கித்
‡ தண்டலைத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
* வெண்டலைப் § புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட
வுலக மன்னவ னொருங்குடன் சென்றுங்

காலும் புரவி யணித்தேர்த் தானையொடு

நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்

காடியல் யானையுந் தேரு மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்
பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்ற
னிருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்

---

எ0 - எக. அரசர்சூடுவென யானைக்குஞ் சூட்டுதலின், வாகையும் தும்பையும் போந்தையோடு நின்யானைமுகத்து ஓங்கித் தோன்றவென்றார்.

ஞாலங் காவலர் நாட்டிறை பயிருங்
[1] காலை முரசங் கடைமுகத் தெழுதலு
[2] நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
யுலகுபொதி யுருவத் [3] தயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடு * புனைந்
திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
† மறையோ ரேந்திய வாவுதி நறும்புகை
நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
[4] வாடக மாடத் தறிதுயி ‡ லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் § றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலி
னாங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி

[5] நாடக மடந்தைய ராடரங் கியாங்கணுங்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே

---

௫௨ - ௩. அரசரிடுந்திறையை அழைக்கும் முரசம்.

௫௮. ஏந்திய - எடுத்த. புகை - அக்கினிகோத்திரம்.

௫௭ - ௮. அக்கினிகோத்திரங்களையும் நமக்கரித்து.

௬௨. ஆடகமாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரமென்பாருமுளர்.

(௬0) ஏறினன் (௬எ) தாங்கினனாகிச் செல்வுழி.

௬௯. கூடையிற் பொலிந்து-குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை-இரட்டை ஒற்றைக்கை.

---

¹. சிலப்பதிகாரம், கஎ: ௫-௬ ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

². "நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி" சிலப். உ௫: கஙஎ.

³. ௫௫-எ. "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர் வலஞ் செயற்கே" புறநா. ௬.

⁴. "ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்" (சிலப். ௩0: ௫௧); 'ஆடகமாடம்' இறை. சூ. உ௯-மேற்.

⁵. "கழங்காடு மகளி ரோதை யாய்ந்து,'வழங்குதொடி முன்கை மலர வேந்தி, வானவன் வந்தான் வளரிவ வனமுலை, தோணல முணீஇய தும்பைப் போந்தையொடு, வஞ்சி பாடுது மடவீர் யாமெனு, மஞ்சொற் கிளவிய ரந்தீம் பாணியும்" சிலப், உள: உச௫-௫0.

பி - ம்.) * 'பொருந்தியிலைஞ்சாச்' † 'மறையோராகிய வாகுதி நறும்புகை நறைசெழுமாலைநல்லகம்' ‡ 'அமைந்தோன்' § 'ஏத்தநாடகமடைந்ததையர்'

# உ௬—கால் கோட் காதை.

௫௩எ

எ0. [1] வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோ

டோடை யானையி னுயர்முகத் தோங்க

வெண்குடை நீழலெம் வெள்வளை *
கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
மாகதப் புலவரும் † வைதா ளிகருஞ்
சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த
யானை வீரரு மிவுளித் தலைவரும்
வாய்வாண் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்

வானவன் போல வஞ்சி நீங்கித்
‡ தண்டலைத் தலைவருந் தலைத்தார்ச்
சேனையும்
வெண்டலைப் § புணரியின் விளிம்புசூழ்
போத
மலைமுது குநெளிய நிலைநா டதர்பட
வுலக மன்னவ னொருங்குடன் சென்றுங்

காலும் புரவி யணித்தேர்த் தானையொடு
நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்
காடியல் யானையுந் தேரு மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்

பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்ற
னிருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்

---

எ0 - எக. அரசர்சூடுவன யானைக்குஞ் சூட்டுதலின், வாகையும் தும்பையும் போந்தையோடு நின்யானைமுகத்து ஓங்கித் தோன்றவென்றார்.

(கூஅ) நாடகமடந்தையர் (எகூ) காட்சியை யுடையை யாகவென வாழ்த்தாநிற்க.

எரு. நல்வலம் - களவெற்றி. எஅ. தானவர் - அசுரர்.

அ0. தார் - தூசிப்படை. அக. கடற்கரை அருகே போத.

அரு. நீலகிரி - ஒருமலை. அஅ. நடுவுநிலை விரும்புவோன்.

அஅ - கூ. சேரன் தாளுள்நின்ற பூமிதேவிக்குத் திருவடியளித்து; அங்கே யானையினின் றிழிந்து கால்நிலந் தோயச்செய்தலால்..............................

---

[1]. "போந்தையொடு தொடுத்த பருவத்தும்பை", 'தோடார் போந்தை தும்பையொடு முடித்து" சிலப். உசு: உக்க; உஎ: சரு.

[2]. "சூதர் மாகதர் வேதா ளிகரொடு"(சிலப். ரு: சஅ); சூத ரேத்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு" மதுரை. கூஎ0-எக.

[3]. எஎ. "வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த" சிறுபாண். உகஉ.

[4]. "வெண்டலைப் புணரி", "வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப" புறநா. உ, கக.

(பி - ம்.) * 'கவருங்கண்' † 'வேதாளியரும்' ‡ 'தண்டத்தலைவருந்தலைச்சார்ச்சேனை § 'புணரிவிசும்புரும்போக'

கூஅ

௯௦. கருந்திறன் மாக்க ளடியீ டேத்தப்
பெரும்பே ரமளி யேறிய பின்ன
ரியங்குபடை யரவத் தீண்டொலி யிசைப்ப

விசும்பியங்கு முனிவர் வியனில மாளு
மிந்திர திருவனைக் * காண்குது மென்றே
௯௫. யந்தரத் திழிந்தாங் கரசுவிளங் கவையத்து

மின்னொளி மயக்கு மேனியொடு தோன்ற

மன்னவ னெழுந்து வணங்கிநின் றோனைச்
[1] செஞ்சடை வானவ னருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய † வானவ கேளாய்
௧௦௦. மலயத் தேகுதும் வான்பே ரிமய
நிலயத் தேகுத னின்கருத் தாகலி
னருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர்
‡ பெருநில மன்ன காத்தனின் கடனென்
றாங்கவர் வாழ்த்திப் போந்ததற் பின்னர்
௧௦௫. [2] வீங்குநீர் ஞால மாள்வோன் வாழ்கெனக்
[3] கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு

நாடருங்

§ தங்குலக் கோதிய தகைசா லணியின
* ரிருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி
மருள்படப் பரப்பிய வொலியன் மாலையர்
வடஞ்சுமந் தோங்கிய வளரிள வனமுலைக்
கருங்கய னெடுங்கட் காரிகை யாரோ
டிருங்குயி லால வினவண் டியாழ்செய

---

கூ௨. இயங்குபடை - சேனை;
வெளிப்படை. இசைப்ப - இசைத்தலால்.
க0க. நிலயத்து - நிற்கிறவிடத்து.
க0௨ - ௫. அங்கு அந்தணர்வாழ்வாருளர்;
அவர்களை நலியாதுகாத்தல்
நினது கடனென்று பெயர்ந்தபின்.

க0௬. கொங்கணதேசத்துக்கூத்தர்.
க0எ. குலத்திற்கு ஓதிய ஒப்பனையினராய். க0அ. குஞ்சியிடத்து. க0கூ. ஒலியன்மாலை - தழைத்தமாலை.

---

1. கூஅ-கூ. "ஆனே ரார்ந்தோ னருளிற் றேன்றி, மாதிலம் விளக்கிய மன்னவன்" சிலப். ௩0; க௪க - ௨. 2. மு. சிலப்பதிகாரம், ௨௬: கடுடு, க௭கூ.
3 பிரயோக. ௨: உரை, மேற். 4. முருகு. க0.

(பி - ம்.) * காண்குவம், † 'வானவன்' ‡ 'பெருதில' § 'தன்குலக்கெழுதிய'

## உகூ.—கால் கோட் காதை.

ருஙூ

வரும்பவிழ் வேனில் வந்தது வாரார்
காதல ரென்னு மேதகு சிறப்பின்
மாதர்ப் பாணி வரியொடு தோன்றக்
கோல்வளை மாதே கோலங் கொள்ளாய்
காலங் காணுய் கடிதிடித் துரறிக்
காரோ வந்தது காதல ரேறிய
தேரோ வந்தது செய்வினை முடித்தெனக்
காஅர்க் குரவையொடு கருங்கய னெடுங்கட்
கோற்றொடி மாதரொடு குடகர் தோன்றத்
தாழ்தரு கோலத்துத் * தமரொடு சிறந்து
வாள்வினை முடித்து மறவாள் வேந்த

ளூழி வாழியென் றோவர் தோன்றக்
கூத்துள் † படுவோன் காட்டிய

முறைமையி

னேத்தின ரறியா விருங்கல ‡ னல்கி

¹ வேத்தின நடுக்கும் வேலோ னிருந்துழி
நாடக மகளிரீ ரைம்பத் திருவருங்

§ கூடிசைக் குயிலுவ ரிருநூற் றெண்மருந்
² தொண்ணூற் றறுவகைப் பாசண் டத்துறை
நண்ணிய நூற்றுவர் ³ நகைவே ழம்பருங்
கொடிஞ்சி நெடுந்தே ரைம்பதிற்
றிரட்டியுங்
கடுங்களி யானை யோரைஞ் ஞூறு
மையீ ராயிரங் கொய்யுளைப் புரவியு
மெய்யா வட்வளத் திருபதி னாயிரங்
⁴ || கண்ணெழுத்துப் படுத்தன கைபுனை
சகடமுஞ்

---

ககரு. பாணிவரி - இப்பொருள்வைத்த உரு.

(கஉ0) கார்காலத்தைப் பாடின பாட்டோடு (கஉக) இவர்கள் தோன்ற; இவர் குடகர்.

கஉச. ஓவர் - ஏத்தாளர். கஉரு. கூத்துள்படுவோன் - ஆடலாசிரியன்.

கஉரு. எய்யாவளம் - புறம்பு ஓரிடத்தும் கண்டறியாவளம்; அதுதான்

வடக்கிற் பாகுட்டம்.

கருக. இன்னசரக்கென் று எழுத்துப்படுத்தன; சகடம்-கொல்லாப்பண்டி.

---

[1]. சிலப். உகூ: கஎ - அ.

[2]. இந்நூல் கூ-ஆம் காதை கச - ஞ ஆம் அடிகளின் உரையையும், அவற்றின் கீழ்க்குறிப்பையும்பார்க்க; ப. உசஅ. [3]. சிலப்பதிகாரம், ஞ: இக.

[4]. கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதி" சிலப்., ஞ: ககஉ.

(பி - ம்.) * 'தமரொடுஞ்சிறந்து வாழ்வினை' † 'படுவோன்' ‡ 'நல்கவேத்தினர் நயக்கும்' § 'கூடைக்குயிலுவர்' || 'கண்ணெழுவுடையன கைபுனைசகடமும்'



சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற
கஞ்சுக * முதல்வரீ ரைஞ்ஞூற் றுவருஞ்
சேயுயர் விற்கொடிச் செங்கோல் வேந்தே
வாயி லோரென வாயில்வந் திசைப்ப
நாடக மகளிரீ ரைம்பத் திருவரும்
† கூடிசைக் குயிலுவக் கருவி யாளருஞ்
சஞ்சயன் றன்னொடு வருக வீங்கெனச்
செங்கோல் வேந்தன் றிருவிளங் கவையத்துச்
சஞ்சயன் புகுந்து தாழ்ந்துபல வேத்தி
யாணையிற் ‡ புகுந்தவீ ரைம்பத் திருவரொடு
மாண்வினை யாளரை வகைபெறக் காட்டி
வேற்றுமை யின்றி நின்னொடு கலந்த
நூற் றுவர் கன்னருங் § கோற்றொழில்

வேந்தே

கருo. [1] வடதிசை || மருங்கின் வானவன் பெயர்வது

கடவு ளெழுதவோர் கற்கே ¶ யாயி
ஞேங்கிய விமயத்துக் கற்கால் கொண்டு
வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்தாங்
கியாங்தரு மாற்றல மென்றன ரென்று

கருரு. [2] வீங்குநீர் ஞால மாள்வோய் வாழ்கென
வடல்வேன் மன்ன ராருயி ருண்ணுங்
கடல்ந் தானைக் காவல னுரைக்கும்
பால் குமரன் மக்கண் மற்றவர்
[3] காவா நாவிற் கனகனும் விசயனும்

---

கருஎ. சஞ்சயன் - தூதிற்றலையாயவன்.

---

தலைக்கீடு - மயிர்க்கட்டு.

கருஅ. கஞ்சுகமுதல்வர் - சட்டையிட்டபிரதானர்.

கசசு. ஆணையிற் புகுந்த ஈரைம்பத்திருவரென்றது, முன்சொன்ன நாடக மகளிரை; கன்னரென்பார் வரக்காட்டினார்.

கருஅ. - கூ. பாலகுமரன் மக்கள் - கனகனும் விசயனுமென்பார்.

---

1. கருo - இக. "இமய மால்வரைக் கெங்கோன் செல்வது,

கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்" சிலப். உரு: கசுஅ-கூ. [2]
''வீங்குநீர் ஞால மாள்வோன்'' களக.

[3]. "யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

(குறள், கஉஎ); ''ஆக்கப் படுக்கு மருந்தலைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும், காக்கப் படுவன விந்திய மைந்தினு, நாக்கல தில்லை தனி வெல்லு மாறே" வளையாபதி.

(பி - ம்.) * 'முதல்வ ரைஞ்ஞூற் றவரும்' † 'கூடிய குயிலுவக்' ‡ 'புகுந்த வைம்பதி......னைரம்மாண்வினை' § 'கோத்தொழில்' || 'மருங்குவான்பேரிமை யத்துக்' ¶ 'ஆகிலோங்கியர்'

## உசு.—கால்கோட் காதை.

ருசுக

விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
யருந்தமி ழாற்ற லறிந்தில ராங்கெனக்
* கூற்றக் கொண்டிச் சேனை செல்வது
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன
வங்கப் பெருநிரை செய்க தாமெனச்
சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்க
ளெஞ்சா நாவின ரீரைஞ் ஞூற்றுவர்
[1] சந்தின் குப்பையுந் தாழ்நீர் முத்துந்
தென்ன ரிட்ட திறையொடு கொணர்ந்து

கஎ0. † கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
* மண்ணுடை ‡ முடங்கலம் மன்னவர்க்
களித்தாங்
காங்கவ ரேகிய பின்னர் மன்னிய

---

கசு0. விருந்தின் மன்னர் - தமிழ்வேந்தர்
ஆற்றலறியாத புதிய அரசர்.

கசு0 - சுக. இவருடன்கூடித் தமிழ்வேந்தரை
இகழ்ந்து உரைத்தார்.

கசுஉ. கூற்றம்போலும் கொடிச்சேனை. 'கூற்றங்
கொண்டிச் சேனை
செல்வது' என்று பாடமாயின், கூற்றம் பின்செல்ல
இப்படை செல்லுகிறபடி
யையென்க.

கசுக-உ. அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலரென்று
சேனை செல்வதெனச்
சேனைமேலிட்டுக்கூறினன்; தனக்கு அவர் நிகரன்மையின்.

கசுசு. கஞ்சுகமாக்கள் - தன்றூதர்.

கசுஎ. எஞ்சா நாவினர் - வார்த்தை தப்பாத நாவினர்
; அரசன் நினைவு
தப்பாத நாவினரென்றுமாம்.

கசுஅ. தாழ்நீர் - தங்குநீர்மை.

கசு அ-கூ. சந்தும் முத்துமாகிய தென்னரிட்ட திறை.

கசுகூ. கொணர்ந்து - கொணர.

கஎ0. கண்ணெழுத்தாளர் - திருமுகமெழுதுவார்.

கஎ0 - எஉ. இவர்வரைந்து இலச்சினையிட்டு அவர் முகங்கொண்டு அவர்போயபின்.

கைக்கொடுப்பத் திரு

கஎக. அளித்து - அளிப்ப.

---

[1]. சந்தனமும் முத்தும் தென்னர்க்கு உரியனவென்பதை,
"கோவாமலையாரம்
......தென்னர்கோன் மார்பினவே" (சிலப். கஎ:
அதன் கீழ்க்குறிப்பாலும் அறிக; ப. சுசுஎ.

உள்வரிவாழ்த்து,க) என்பதனாலும்

[2]. "மன்னுடை முடங்கன் மாதவி யீத்ததும்" சிலப். கஙூ: எகூ.

(பி - ம்.) * 'ஓற்றங்கொண்டு' † 'கண்ணெழுத்தாளரொடுகாவல்' ‡ 'முடங் கன்மன்னவற்கு'



வீங்குநீர் ஞால மாள்வோ னோங்கிய
நாடாள் செல்வர் நல்வல னேத்தப்

பாடி யிருக்கை நீங்கிப் பெயர்ந்து
கங்கைப்பே ரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங் * கெய்தி
யாங்கவ ரெதிர்கொள வந்நாடு கழிந்தாங்
கோங்குசீர் வேலி யுத்தர மரீஇப்
பகைப்புலம் புக்குப் பாசறை † யிருந்த
தகைப்பருந் தானை மறவோன் றன்முன்
னுத்தரன் விசித்திர னுருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் ‡ றனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாந்
தென்றமி ழாற்றல் § காண்குதும் யாமெனக்
கலந்த கேண்மையிற் கனக விசயர்
¹ நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர
விரைதேர் வேட்டத் தெழுந்த வரிமாக்
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேல் மன்னர்
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
‖ வெயிற்கதிர் விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்
வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயி

௧௭௯. உத்தரம் - வடபூமி.

௧௮௨-௪. உத்தரன்

விசித்திரன்முதலான மன்னவர்கள், கனகவிசயர்க்குத் துணையான அரசர்.

௧௮௫ - ௭. தமிழாற்றலைக் காண்டுமெனக்

கனகவிசயர் தானையுடனே

ஒத்துவர.

௧௯0. பாய்ந்த பண்புபோல.

௧௯௧. காஞ்சித்தானை - எதிரூன்றிய தானை.

---

[1]. "நிலத்திரைக்குங் கடற்றானை" புறநா. ௬௭.

(பி - ம்.) * 'ஏறியாங்கவரெதிர்கொளவவரநாகெழிந்தேதாங்குநீர்' † 'இராஅத் தலைப்பெருந்தானை' ‡ 'தருத்திரன்' § காண்குவதாமென' || 'வெயிற்கொடி'

ரிடிக்குரன் முரச மிழுமென் பாண்டி
¹ லுயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசமொடு மாதிர மதிரச்
† சிலைத்தோ ளாடவர் செருவேற் றடக்கையர்
கறைத்தோன் மறவர் கடுந்தே ரூருநர்
வெண்கோட் டியானையர் ‡ விரைபரிக் குதிரையர்
மண்கண் கெடுத்தவிம் மாநிலப் பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
§ விளங்குகொடி நந்தின் வீங்கிசை நாவு
நடுங்குதொழி லொழிந்தாங் கொடுங்கியுள் செறியத்
தாருந் தாருந் ‖ தாமிடை மயங்கத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோண் மறவ ருடற் ¶ பொறை யடுக்கத்
தெறிபிண மிடறிய குறையுடற் கவந்தம்
** பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்

[3] பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்

உ௧0. கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட

†† வடுங்தோத் தாணை யாரிய வரசர்

---

௧௯௪. பாண்டில் - கஞ்சதாளம்.

௧௯௫. மாதிரமதிர்தல் - இவை அதிரத் தானுமதிர்தல்.

௧௯௪-௯. முரசமுதலிய இவையிற்றோடு. ௧௯௮ கறைத்தோல்-கருங்கடகு.

உ0உ. கொடிநந்து - கொடியும் சங்கும் முகத்துக்கட்டுவர்போலும்; 'சங் கின்னா' என்றார், பேசுதலால்; ஒலிபற்றி.

உ0௫. ஒழிந்து - ஒழிய. உள்ளோர் துகள்செறிய.

உ0௬. உடற்பொறை- உடற்பாரம். உ0எ. எறிபிணம்-வெட்டுண்டபிணம்.

உ0அ. பேய்மகள் தாளத்துக்கு ஆட.

---

[1] ௧௯௯-௯. "உயிர்ப்பலியுண்ணு முருமுக்குரன்முழக்கத்து, மயிர்க்கண்முரசு" (சிலப். இ: அஎ - அ); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாதுபோர்த்த, மயிர்க்கண் முரச மோவில கறங்க" (மதுரை. எ௩உ-௩.); "உருமிடி முரசமொடு" (முருகு. ௧௨௧;) "ஏற்றுரி போர்த்த......முரசு" (மணி. க; உ௯ - ௯௧; "சாற்றிடங்கொண்ட வேற்றுரி முரசம்", "ஏற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்கு" (பெருங். க. ௯அ; ௧00; ;டி டி

௪௧: ௧௯(௫:); "ஏற்றரிமுரசநாண" சீவக. ௨௧௪௨.

² "பேய்க்க ணன்ன பிளிறுகடி முரசம்" பட்டினப். ௨௩௬.

³ "கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப், பிணந்தின் யாக்கைப் பேய்மகள்" பட்டினப். ௨௫௯ - ௬௦.

(பி - ம்.) * 'இடிக்கண்' † 'இலக்கொளாடவர்' ‡ 'விடுபரி' § 'விளங்கொளி நத்தின்' || 'தம்மிடை' ¶ 'பொறியடுக்கத்' ** 'பறைக்குரற்பேய்' †† 'நெடுந்தேர்த்தானை'



கடும்படை மாக்களைக் கொன்று களங் * குவித்து
நெடுந்தேர்க் கொடிஞ்சியும் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட
¹ வெருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை
யொருபக லெல்லையி னுண்ணு மென்ப
² தாரிய வரச ரமர்க்களத் தறிய
ஊழி வாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
³ யோங்கிருஞ் சென்னி மேம்பட † மலைய
வாய்வா ளாண்மையின் வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசய னு
மைம்பத் திருவர் கடுந்தே ராளரொடு

செங்குட் டுவன் றன் சினவலைப் ‡
படுதலுஞ்

உஉரு. * சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர்

பிடிகைப் பீலிப் பெரு § நோன் பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளின
ராடு கூத்த ராகி யெங்கணு
மேந்துவா ளொழியத் தாந்துறை போகிய

உஙo. விச்சைக் கோலத்து வேண்டுவயிற் ‖
படர்தரக்

கச்சை யானைக் காவலர் நடுங்கக்

---

உகரு; எருமையாகிய பரியூர்வோன் - கூற்றுவன்.
உகஅ. [5] ஞாழிலாட்டுவதாக.
உஉக. வாய்வாளாண்மை - வாய் வறிது இராமை.
உஉரு.
உடையினர் - காஷாயமுதலிய உடையினர் = சந்நியாசிகள்.

---

1, உகரு - அ. "மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத்
தொருமையு, நின்னொடு தூக்
கிய வென்வேற் செழிய" புறநா. கக.

³. உகஎ - அ. "ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத்,
தொன்முதிர் வடவரை
வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பணித்தோன்
வஞ்சி" அகநா. கூகூ.

³. "ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த" பொருந.

கசடு. *⁴. உஉகு - அ. "மீளுய் வேலையை யுற்றுர்
சிலர்சிலர் பகுவாய் வழிதொறு மேய்
புற்று, குனர் பறவையின் வடிவுற் றுர்சிலர் சிலர்நான், மறையவ ருருவானுர், மானுர்
கன்னிய மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்று, ரானுர் சிலர்சில ரையா நின்
சர ணென்றுர் நின்றவ ரரியென்றுர்" (கம்ப. அக்க. சல) என்னுஞ் செய்யுள் இவ்வடிக

ளுடன் ஒப்புநோக்கற்பாலது.

⁵. தாழிலாட்டு - கொன்று குவித்தல்; மலைபடு. அஎ - ந.

(பி - ம்.) *'குவித்து தாழிலாட்டிய' † 'மலைந்துவாய் வாளாண்மையின்
‡ 'பழித்தலும்' § 'தோண்டாளரிற்பாடு' || 'படர்ந்தகச்சை'

# உகா.—கால் கோட் காதை.

ருசரு

* ¹ கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
† வாளுழி வாங்கி யதரி திரித்த

வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தித்
உகடு. தொடியுடை நெடுங்கை தூங்கத் தூக்கி

முடியுடைக் கருந்தலை ‡ முந்துற வேந்திக்

* கடல்வயிறு கலக்கிய ஞாட்புங் கடலக
ழிலங்கையி லெழுந்த சமரமுங்
கடல்வணன்
றேளுர் செருவும் பாடிப் பேரிசை
உ௪0. முன்றேர்க் குரவை முதல்வனை வாழ்த்திப்
பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை

* முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித்

தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய
ஊன்சோறு
மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்டச்

---

உ௩உ. யானை எருதாக வாள் பிடிக்குங் கோலாக.

உ௩௩. ஆளழிவாங்கி - ஆளாகிய பேர்ரை
இறங்கவிட்டு. அதரிதிரித்த -
* கடாவிட்ட.

உ௩௫. தொடிக்கை - பேய்க்கை. துழங்க - அசைய.

உ௩௬. முந்துற - முன்னுக.

உகள-கூ. கடல்வயிறு கலக்கிய போர்முதல் மூன்றும் மாயவன் செய்தன.

இவன் மேலேற்றிப் பூவைநிலையாற்பாடுதல்.

உசo - சக. முன்றேர்க்குரவையிலே முதல்வனை வாழ்த்திப் பின்றேர்க்குரவையிலே ஆடுதலிற் பேய்க்குரவையாயிற்று.

உசஉ. பிடர்த்தலையாகிய தாழி.

உசச. பேய்வாலுவன் - பேய்க்குச்சோறிடு மடையன்.

---

[1]. "யானையெருத்தின் வாண்மடலோச்சி, யதரி திரித்த" புறநா. களக.

[2]. உகள-கூ. இசள-ம் பக்கத்து, அ-கo-அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

[3]. "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண்குருதி, சினத்தீயிற் பெயர்பு பொங்கத், தெறலருங் கடுந்துப்பின், விறல்வினங்கிய விழுச்சூர்ப்பிற், குருதித்தோட் கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவ, னடியொதுங்கிப் பிற் பெயராப், படையோர்க்கு முருகயர" (மதுரை. உகூ - கூஅ); "முடித்தலை யடுப்பாகப் புனற்குருதி புலக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சி" புறநா. உகூ.

(பி - ம்.) * 'கோட்டுமொழூட்டி' † 'வாளரிவர்ங்கியதிரிதிரித்த' ‡ 'முன்னுறவேத்தி'





உசஙு. சிறப்பூண் கடியினஞ் செங்கோற் கொற்றத்

தறக்களஞ் செய்தோ னூழி வாழ்கென
மறக்கள முடித்த வாய்வாட் குட்டுவன்
[1] வடதிசை மருங்கின் மறைகாத் தோம்புநர்
தடவுத்தீ யவியாத் தண்பெரு வாழ்க்கை
காற்றா தாளரைப் போற்றிக் காமினென
வில்லவன் கோதையொடு வென்றுவினை முடித்த
பல்வேற் றானைப் படைபல வேவிப்
பொற்கோட் டிமயத்துப் * பொருவறு பத்தினிக்
கற்கால் கொண்டனன் காவல னாங்கென்.



---

உசக. வாழ்க்கையென்றது, முன்புவந்த ஆகாசசாரிகள் சொன்ன வார்த்தையை நினைந்து.

உருo. காற்றாதாளரை நீர் போற்றிக் காமினெனச் சொல்லி.

உருச. கால்கொள்கையாவது - கடவுள் வடிவெழுதத்தொடங்குதல்.

(உருக) வில்லவன் கோதையோடே (உருஉ) படையையேவிக் (உருச) கற்செய்தலை அடிக்கொண்டான்.

உகூ.— † கால்கோட்காதை
முற்றிற்று.

---

¹, உசஅ-கூ. "அருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர், பெருநில மன்ன பேணினின் கடனென்று" சிலப். உக: கoஉ-கூ.

(பி - ம்.) * 'பொதுவற' † 'கற்கால்கொள்காதை'

## இருபத்தேழாவது

# நீர்ப்படைக்காதை.

வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடி யேற்றிச்
செறிகழல் வேந்தன் றென்றமி ழாற்ற
லறியாது மலைந்த வாரிய மன்னரைச்
செயிர்த்தொழின் முதியோன் செய்தொழில் பெருக
வுயிர்த்தொகை * யுண்ட வொன்பதிற் றிரட்டியென்

றியாண்டு மதியு நாளுங் கடிகையு
ஈண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள
வருபெருந் தானை மறக்கள மருங்கி
னொருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட
செங்குட் டுவன்றன் † சினவேற் றானையொடு
கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நாற் ‡ திறன் மாக்களி னீர்ப்படை செய்து

---

உ. கடவுட்பத்தினி - பத்தினியாகிய கடவுள்.

எ. செயிர்த்தொழின் முதியோன் - கூற்றுவன்.

அ - க0. [1] உயிர்த்தொகை உண்டனவாகிய ஆண்டும் மதியும் நாளும் கடிகையும் ஒன்பதிற்றிரட்டியென்று அவற்றோடே கூட்டியெண்ண=தேவாசுர யுத்தம் பதினெட்டாண்டிலும், இராமராவண யுத்தம் பதினெட்டுமாதத்திலும், பாண்டவ துரியோதன யுத்தம் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்றெண்ண.

(சு) மன்னரை (கஉ) உயிர்த்தொகையுண்ட (கரு) செங்குட்டுவன்.

1. 'இவ்வுரைக்குறிப்பு' "எண்கொண்டஞாட்பு" (சீவக. உகடுக) என்னும் மூலத்தாலும், அதற்கு, 'தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் என்கின்றபோர்' என்றெழுதிய உரையாலும், "தேவாசுர ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொருகளமே" (கலிங்க. களம். க) என்பதனாலும் அழகுற்றுப் பொருட்டொடர்புபெற்று விளங்குதல் காண்க.

(பி - ம்.) * 'உண்டனனென்பதிற்' † 'செருவேல்' ‡ 'திறமாக்கள்'



மன்பெருங் கோயிலு மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரு
முரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையுந்
திருமலர்ப் பொய்கையும் வரிகா ணரங்கமும்
பேரிசை * மன்னர்க் கேற்பவை பிறவு
மாரிய மன்ன ரழகுற வமைத்த
தெள்ளுநீர்க் கங்கைத் தென்கரை யாங்கண்
வெள்ளிடைப் பாடி வேந்தன் புக்கு
நீணில † மன்னர் நெஞ்சுபுக லழித்து
‡ வானவ மகளிரின் வதுவைசூட் டயர்ந்தோ
ருலையா வெஞ்சம மூர்ந்தம ருழக்கித்
தலையுந் தோளும் விலைபெறக் கிடந்தோர்
நாள்விலைக் கிளையு ளல்லம ரழுவத்து

௲௦. வாள்வினை முடித்து மறத்தொடு §
முடிந்தோர்

குழிகட் பேய்மகள் குரவையிற் றொடுத்து
வழிமருங் கேத்த வாளொடு மடிந்தோர்
இளைக டம்மொடு கிளர்பூ ணகத்து
வளையோர் மடிய மடிந்தோர் மைந்தர்

௲௫. மலைத்துத் தலைவந்தோர் வாளொடு மடியத்
தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்
திண்டேர்க் கொடிஞ்சியொடு தேரோர் வீழப்

புண்டோய் குருதியிற் பொலிந்த மைந்தர்
மாற்றருஞ் சிறப்பின் மணிமுடிக்
கருந்தலைக்

---

௨௪. வெள்ளிடைப்பாடி - வெளியான நிலத்துப்
பாசறை. [டவர்.

௨௫. தெய்வமகளிரால் மாலைசூட்டப்
பட்டோராவார் - வீரஞ்செய்துபட்

௨௭. ஊர்ந்து - அடர்ந்து.

௨௯. விலைபெற - அரசர் கண்டு நேயத்தோராம்படி.

௨௯. அமரமுகம் - சமரபூமிப்பரப்பு.

௩௦. வாளாற்செய்யும் வினைகளெல்லாவற்றையுஞ் செய்துமுடித்து.

௩௨. வழிமருங்கேத்த - வழியிலுள்ளாரையேத்த.

௩௩. கிளைகள் - போரில் உடனின்று பட்டவர்கள்.

௩௩-௪. உறவான வீரர் தம்மொடு மடிந்தோர்; ஸ்திரீகள்மடிய மடிந்தோர்.

௩௫. தலைத்தார் - தூசி. வாகையணிந்தோர் - மாற்றார் புறத்தைத் தாங்கள் பெற்றவளவிலே மீண்டோர்.

---

(பி - ம்.) * 'மன்னர்கொற்பலவை' † 'மறவர்நெஞ்சு' ‡ 'வானவர்மகளிரின்' § 'மடிந்தோர்'

## ௨௭.—நீர்ப்படைக்காதை.

௫௪௧

௪௦. [1] கூற்றுக்கண் ணோட வரிந்துகளங் கொண்டோர்
பிறஞ்சிதை கவயமொடு பிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வாண் மறவர்
வருக தாமென [2] வாகைப் பொலந்தோடு

பெருநா ளமயம் பிறக்கிடக் கொடுத்துத்
சரு. தோடார் போந்தை தும்பையொடு முடித்துப்
* பாடுதுறை முற்றிய கொற்ற வேந்த
னுடுகொண் * மார்போ டரசுவிளங்
கிருக்கையின்
ள மாடல மறையோன் வந்து தோன்றி
வாழ்க வெங்கோ மாதவி மடந்தை
ரு௦. கானற் பாணி கனக விசயர்த
முடித்தலை † நெரித்தது முதுநீர் ஞால
மடிப்படுத் தாண்ட வரசே வாழ்கெனப்
பகைப்புலத் தரசர் ‡ பலரீங் கறியா
நகைத்திறங் கூறினை நான்மறை யாள
ருரு. யாதுநீ கூறிய § வுரைப்பொரு ளீங்கென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குங்
கானலந் தண்டுறைக் கடல்விளை யாட்டினுண்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோ
டேற் காலத் தூழ்வினை யுருத்தெழக்

---

சச. பெரியநாளிற் கொடுக்கும் பொழுது ஒழிய நெடும்பொழுதிருந்து கொடுத்து; 'பெருநாள்' என்றார், கொடுக்கிறநாளாதலால்.

(உகூ) 'வதுவை சூட்டயர்ந்தோர்' முதல் (ரூச) 'வளையோர் மடியமடிந்.

தோர்' இறுதி பட்டவர்களையெண்ணி இவர்கள் : மைந்தரென ஓரெண்ணாக்கி, மேல் படாதுபொருது வென்றவர்களையுங்கூட்டியெண்ணி இவர்களுக்கு(சரு-ச) வாகைகொடுத்தென்றார்.

சகூ. வீரரைப்பாடும் புறத்துறையெல்லா முடித்துப் பாட்டுண்ட வேந்தன்.
சஎ. வெற்றிகொண்ட மார்போடே.

ருகூ - எ. மாற்றரசர் பலரும் அறியாத சிரிப்பின்கூறென்றது, (ருக) நெரித்ததென்றதனை. 'நானறியாத நகை' என்னாது 'மன்னர் பலருமறியாத' என்றான், இராசபாவத்தாலே.

---

1. 'கூற்றுக்கண்ணோடிய வெருவருபறந்தலை'' புறநா. கக.
2. சிலப். உகூ: எ௦-எக - ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.
3. "பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்வி" சிறுபாண். உஉஅ.

(பி - ம்.) * 'மகளிரோடரச' † 'எற்றி' ‡ 'பரிசிலங்கதியாது' § 'உரையிற் கென்னை'



கூடாது * பிரிந்து குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரை புக்காங்
கிலைத்தார் வேந்த † னெழில்வா னெய்தக்
[1] கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
[2] குடவர் கோவே நின்னாடு புகுந்து
வடதிசை மன்னர் மணிமுடி ‡ யேறின
ளின்னுங் கேட்டரு ளிகல்வேற் றடக்கை
மன்னர் கோவே யான் § வருங் காரண

மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வே
னூழ்வினைப் பயன்கொ லுரைசால்
சிறப்பின்
வாய்வாட் டென்னவன் மதுரையிற்
சென்றேன்
வலம்படு தானை மன்னவன் றன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை
யென்றலுங்
* தாதெரு மன்றத்து மாதரி யெழுந்து
கோவலன் றீதிலன் கோமகன் பிழைத்தா

னடைக்கல மிழந்தே னிடைக்குல மாக்காள்

குடையுங் கோலும் பிழைத்த வோவென
விடையிரு ளியாமத் தெரியகம் புக்கதுந்
தவந்தரு சிறப்பிற் ‖ கவுந்தி சீற்ற
நிவந்தோங்கு செங்கோ னீணில வேந்தன்
போகுயிர் ¶ தாங்கப் பொறைசா லாட்டி
** யென்னோ டிவர்வினை யுருத்த தோவென
* வுண்ணா நோன்போ †† டுயிர்பதிப் பெயர்த்ததும்

பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்

அ௫. குற்றது மெல்லா மொழிவின் றுணர்ந்தாங்

---

---

எஎ. 'பிழைத்தவோ' என்றாள், முன் பிழையாமைபற்றி.

எகூ. சீற்றம் - சீற்றத்தை.

அக. சபியாதபடி தணித்தது அவன் மரணம்.

அகூ. ஊணும் மாற்றிப்போய்.

---

1. சிலப்பதி. கக. 2."குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை" மணி. உஅ: ௧0௧.
3. தாதெருமன்றம்: சிலப். ப. ௬௪௭.
4. "உயிர்பதிப் பெயர்த்தமை யுறுக" (சிலப். உகு: ௬எ); "உன்னு தோன்போ லுயிர்பதிப் பெயர்ப்புழி" மணி. ௧௬: ௬௫

(பி - ம்.) * 'பிரிந்த' † 'உயர்வானெய்த' ‡ 'ஏத்தின' § 'வருகாரணமமரமுனி வனமில' || 'வெந்தியடிகளிவந்து' ¶ 'தாங்காப்பொறை' ** 'என்னெருவேர்வினை' †† 'உயர்பதிப் பெயர்ந்ததும்'

## உஎ.—நீர்ப்படைக் காதை.

௫௫ கென்பதிப் பெயர்ந்தே னென்றுயர் *

போற்றிச்

செம்பியன் மூதூர்ச் சிறந்தோர்க் † குரைக்க

மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ்

செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி
‡ மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங்
[1] கிந்திர விகார மேழுடன் புக்காங்
கந்தர சாரிக ளாறைம் § பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவுந்
துறந்தோன் மனைவி மகன்றுயர் பொறாஅ
‖ ளிறந்ததுய ரெய்தி யிரங்கிமெய் விடவுங்
கண்ணகி தாதை கடவுளர் கோலத்
தண்ணலம் பெருந்தவத் [2] தாசீ வகர்முன்
புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவுந்

தானம் புரிந்தோன் றன்மனைக் கிழத்தி
** நாள்விடூஉ நல்லுயிர் நீத்துமெய் விடவு

மற்றது கேட்டு [3] மாதவி மடந்தை

௯௨. இந்திரவிகாரம் - இந்திரனால் நிருமிக்கப்பட்ட

அரங்கு.

கூரு - ரு. ஆறைம்பதின்மர், அவர் தாம் முன்பு பிறந்து வருகிற யாக்கை

யது பிறப்பறமுயன்று துறந்தாரென்று விசேடணம்.

கöஉ. நாள்விடூஉ - நாளைவிட்டு; வினையெச்சம்.

---

[1]. கூஉ-க: "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்று,மிந்திர விகார மேழுடன் போகி" (சிலப். க0: கக - ச): "இந்திர விகார மேழுமேத் துதலின்", "அந்தர சாரிக ளமர்ந் தினி துறையு, மிந்திர விகார மெனவெழில் பெற்று" மணி. உசு: ருஓ; உஅ: சுகூ-எ0.

[2]. ஆசீவகம் - சமணமதத்தின் பாகுபாடுகளுள் ஒன்று; இம்மதத்தினர்க்குத்தெய் வம் 'மற்கலி' என்றும், நூல் 'நவகதிர்' என்றும் கூறுவர்; "என்றது மற்கலிதானே பிறையினி, யொன்பது வாய்கதிர் நூல்யா முடையன, மன்பெரு நுண்பொரு ளைத்தி யல் பாயவை, யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல" நீலகேசி. ஆசீவக. கக.

[3]. கöக - அ. கோவலன் இறந்தமை கேட்டு மாதவி பௌத்தப்பள்ளியை யடைந்து அறவு பூண்டமை, "போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியத்தா னம் புரிந்த, மாதவி தன்துறவுங் கேட்டாயோ தோழி" (சிலப். உக. "காதலன்றன்"); "சங்கம் மாதவ ருறைவிடம் புகுந்தேன், மறவண நீத்த மாசறு கேள்வி, யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து, மாபெருந் துன்பங் கொண்டுள மயக்கிக், காதலனுற்ற கடுந் துயர்கூற......உரவோ னருளினன்", "கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி, மாதவி மாதவர்பள்ளியு ளடைந்ததும்" (மணி. உ: ருசு - சுசு; கஅ: எ - அ.) என்னு மிடங்களிலும் கூறப்பட்டுள்ளது.

(பி - ம்.) * 'போலச்' † 'உரைப்ப' ‡ 'மாபெருந்தான மாண்பொருளீய்ந் தாங்கு' § 'பதின்மர்முன்பிறந்த' || 'இறந்துயிர்நீங்கி' ** 'நாள்வீடு'

* நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
கரு௫. [1] மணிமே கலையை வான்றுய ருறுக்குங்
கணிகையர் கோலங் † காணு
தொழிகெனக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவு
மென்வாய்க் கேட்டோ ரிறந்தோ
ருண்மையி
ககO. னன்னீர்க் கங்கை ‡ யாடப் போந்தேன்
மன்னர் கோவே வாழ்க வீங்கெனத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்த
வாடா வஞ்சி வானவர் § பெருந்தகை
மன்னவ னிறந்தபின் வளங்கெழு சிறப்பிற்
கக௫. § றென்னவ ணுடு செய்ததீங் குறையென
நீடு வாழியரோ நீணில || வேந்தென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குழின்
மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
வொத்த ¶ பண்பின ரொன்பது மன்ன
கஉO. ரிளவரசு பொறாஅ ரேவல் ** கேளார்
வளநா டழிக்கு மாண்பின ராதலி

[2] ஞென்பது குடையு மொருபக லொழித்தவன்

---

---

க0ௗ. நற்றிறம்படர்கேன் நற்றிறம் படரக்கடவேன்.

க0௫ - ௬. மணிமேகலையைக் கணிகையர்கோலங் காணுதொழிகவென்று நற்ருய்க்குச் சொல்லி. துன்பத்தைச் செய்யும் கணிகையர் கோலமென்ருன், அக்கோலத்தால் தான் துன்பமுறுதலால்.

௬0 - கக0. அவர்கள் இப்படிச் செய்யா நிற்க அவரின் இறந்தோருண்டா கையாற், கங்கையாடப்போந்தேனென்ருன்.

ககக. ஈங்கு - இப்பூமியின். ககௗ. மன்னவன் - பாண்டியன்.

ககக. தவற்ருல் ஒத்தபண்பினையுடையர்.

---

---

[1]. க0ௌ - அ. "மணிமேகலை, அருந்தவப் படுத்த லல்ல தியாவதுந், திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்" மணி. உ: ௫௫ - எ.

[2]. "ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை, நேரி வாயி னிலைச்செரு வென்று"

(சிலப். உ௮: ௧௧௬-௭): "ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோ, ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து, நிலைச்செருவி னாற்றலை யறுத்து" பதிற். ௫-ஆம்பத்துப்பதிகம்.

(பி - ம்.) * 'நற்றவர் தமக்கு நற்றவம் படர்கென' † 'காணயதேர்கென' ‡ 'ஆடியபோந்தேன்' § 'தென்னவநன்னாடு' ‖ 'வேந்தென்றமாடல' ¶ 'பண்பி னென்பது' ** 'கொள்ளார்'

# உஎ.—நீர்ப்படைக்

காதை.

பொன்புனை திகிரி யொருவழிப்
படுத்தோய்
[1] பழையன் காக்குங் குழைபயி
னெடுங்கோட்டு
வேம்புமுத றடிந்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிப் பொறைய
கேட்டருள்
[2] கொற்கையி லிருந்த *
வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்ல † ரீரைஞ்
ஞூற்றுவ ரொருமுலை
குறைத்த திருமா பத்தினிக்

கொருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி
யுரை ‡ செல வெறுத்த மதுரை மூதூ
ரரைசுகெடுத் தலம்வரு மல்லற் காலைத்
தென்புல மருங்கிற் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கு முறைமுதற் கட்டிலி
னிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
வொருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறினா
னூழிதொ றூழி யுலகங் காத்து
வாழ்க வெங்கோ வாழிய பெரிதென
மறையோன் கூறிய மாற்ற மெல்லா
மிறையோன் கேட்டாங் கிருந்த வெல்லையு
ளகல்வாய் ஞால மாரிருள் விழுங்கப்

---

கஉச - ரு. பழையன் - குறுநிலமன்னன்; அவன் வேம்பு.

கஉஅ. ஈரைஞ்ஞாற்றுவர் - ஆயிரவரை.

கருக. புகழ் எங்கும் பரக்கும்படி மிக்க மதுரை.

[1]. "பழையன்காக்குங் கருஞ்சினைவேம்பின், முரரை முழுமுத லமியப் பண்ணி" (பதிற். ரு-ஆம் பத்துப் பதிகம் ; "மோகூர்ப், பணியா மையிற் பகைதலை வந்த; மாகெழு தானை வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த" (அகநா. உருக,) 'பழையன்மோகூர்" மதுரை. ருo அ.

[2]. "கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப் பொற்கொல்லராயிர வரைக்கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து 'நோயுந்துன்பமுநீங்கியது" சிலப். உரைபெறுகட்டுரை, க.

[3]. மு: சிலப்பதிகாரம், ௨: அ. [4]. சிலப்பதிகாரம், கo: கசரு.

(பி - ம்.) * 'இளங்கோச்செழியன்' † 'கரைந்தார்முவரை' ‡ 'செலவழுத்த,





பகல்செல * முதிர்ந்த படர்கூர் மாலைச்
செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க
வந்திச் செக்கர் வெண்பிறை தோன்றப்
பிறையேர் வண்ணம் பெருந்தகை நோக்க
இறையோன் செவ்வியிற் கணியெழுந்

துரைப்போ

னொண்ணுன் குமதியம் வஞ்சி

நீங்கியது

மண்ணுள் வேந்தே வாழ்கென் றேத்த
[1] நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த
கொடும்பட நெடுமதிற் † கொடித்தேர்

வீதியுட்

[2] குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன

வுறையுண் முடிக்க ரொருதிறம் போகி
கடுரு. ‡ வித்தகர் கைவினை விளங்கிய
கொள்கைச்
சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்

கோயி லிருக்கைக் கோமக னேறி
வாயி லாளரின் மாடலற் § கூஉ.
யிளங்கோ வேந்த || ிறந்ததற் பின்னர்
கசுர0. வளங்கெழு நன்னாட்டு மன்னவன்
கொற்றமொடு
செங்கோற் றன்மை தீதின் றுரவென
வெங்கோ வேந்தே வாழ்கென் றேத்தி
மங்கல மறையோன்
மாடல னுரைக்கும்
வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர்
வியப்ப

---

கஉசு - கூ. தன்னியல்பு முதிர்ந்த மாலையாகிய
செந்தீப்பரந்த மேலைத்
திசை விளங்கப் பிறைதோன்ற.

கஉள. பிறையெழுந்தபடியை. கடுக. நிரல் -
ஒழுங்கு.

கருஉ. படம் - படங்கு. படங்கை மதிலாகவுடைய வீதி.

கருச. உறையுள் - உறையுமிடம். கருரு. பீடிகை - சிங்காதனம்.

கருசா. இளங்கோவேந்தர் - பட்ட ஒன்பதின்மர்.

---

1. "நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லை. சச); "கண்டப் பூத்திரை காழ் மூதற் கொளீஇ" பெரும். உ. ச: கக௪.

2. "குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன" மணி. கூ: இஅ:

(பி - ம்) * 'மூசஞ்சிய' † 'கொடித்தேர்வீதியிற்' ‡ 'வித்தகன்' § 'உவி' || 'நிரந்தயில்லார்'

## உஎ.—நீர்ப்படைக் காதை.

ருருரு. கசுரு. [1] வெயில்முன் * றெறிந்த விகல்வேற் கொற்றமுங்

[2] குறுநடைப் புறவி னெடுந்துயர் தீர

வெறிதரு பருந்தி னிடும்பை நீங்க

வரிந் துடம் பிட்டோ னறந்தரு கோலுந்
திரிந்துவே றுருகுங் காலமு முண்டோ
கஎ0. தீதோ வில்லைச் செல்லற் காலையுங்

* காவிரி புரக்கு நாடுகிழ வோற் † கென்
றருமறை முதல்வன் சொல்லக் கேட்டே
பெருமகன் மறையோற் பேணி யாங்கவற்
காடகப் ‡ பெருநிறை யையைந் திரட்டித்
கஎரு. தோடார் போந்தை வேலோன் றன்னிறை
மாடல மறையோன் கொள்கென் §

றளித்தாங்

* காரிய மன்ன ரையிரு பதின்மரைச்

சீர்கெழு நன்னாட்டுச் செல்கவென் || றேவித்

* தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த
கஅ0. மாபெருந் தானை மன்ன குமரர்

---

கஎச. ஐம்பது துலாம்பாரம் பொன்.
கஎஎ. ஐயிருபதின்மர் - முன்சொன்ன கன்னகர்....

1. "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்" (சிலப். உகூ: "வீங்குநீர்")— "ஒன்னாருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்" (புறநா. நகூ); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்குமெயிலுந் தொலைத்தலால்," (பழ. சகூ); "ஒன்னா, ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந், தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்" (சிறுபாண், எகூ-அஉ); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (மணி. க: ச); "தேங்கு தூங்கெயி லெறிந்த வவனும்" (கலிங்கத்து. இராச. கஎ); "வாங்குந் திருக்கொற்ற வாளொன்றின் வாய்வாய்ப்பத், தூங்கும் புரிசை துணித்த கோன்" (இராசராசசோழனுலா, கரு); "தூங்கு மெயிலெறிந்த சோழனும்" விக்கிரமசோழனுலா, கூ

2. புறவின் துயர்தீர்த்த குறிப்பின்விரிவை, இன்ன ரு-ஆம் அடிக்குறிப்பிற்காண்க.

இப்புத்தகம் சஅரு-ஆம் பக்கத்தி 3.

4.

"காவிரி புரக்கு நாடுகிழ வோனே" பொருந. உசஅ.

சிலப்பதிகாரம், உகூ: சகூரு. 5. சிலப்பதிகாரம், உகூ: உஉ௫-கூ.

1. (பி - ம்.) * 'எறிந்தவியறெர்க்கொற்றக்' † 'எனவருமறை' ‡ 'பசுநிரை' § 'அளித்தாங்கு' || 'ஏவிக், கருங்கயனெடுங்கட் கவின்பெறுகாதில் விரிவெண்'

[1] சுருளிடு தாடி மருள்படு பூங்குழ
லரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண்
விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை யாடமைப் பணைத்தோள்
வளரிள வனமுலைத் * தளரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி யாரியப் பேடியோ
டெஞ்சா † மன்ன ரிறைமொழி மறுக்குங்
கஞ்சுக முதல்வ ரீரைஞ் ஞூற்றுவ
ரரியிற் போந்தை யருந்தமி ழாற்ற
றெரியாது மலைந்த கனக விசயரை
யிருபெரு வேந்தர்க்குக் ‡ காட்டிட வேவித்
திருந்து துயில் கொள்ளா வளவை யாங்கணும்
பரம்புநீர்க் கங்கைப் பழனப் பாசடைப்
பயிலிளந் தாமரைப் பல்வண் டியாழ்செய

கசுரு. வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குண திசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்

குடதிசை யாளுங் கொற்ற வேந்தன்

வடதிசைத் தும்பை வாகையொடு § முடித்துத்

தென்திசைப் || பெயர்ந்த வென்றித் தானையொடு

உ00. நிதிதுஞ்சு வியனகர் நீடுநிலை நிவந்து

---

கஅக. தாடி - மோவாய்.

கஅரு. வெண்டோடு - சங்கினாற் செய்த காதாபரணம்.

கஅஎ. எஞ்சாமன்னர் - மறத்திறலொழியாத மன்னர்.

கஅஎ - அ இறைமொழிமறுக்கும் கஞ்சுகமுதல்வர் - மேலான வார்த்தை பொருது மறுத்துரைக்குந் தூதர்.

கஅசு. அரியில்-அரிதரலில். ஆற்றல்-இவர்களைவென்று கைக்கொண்டவலி.

கஅஅ - கூக. தூதர் காட்டிட வேலி.

ககஉ. கொள்ளாவளவை, கடுமைகூறிற்று.

ககூ. கங்கையைச்சூழ்ந்த பழனம்

உ00. நகர் - கோயில்.

---

1. கஅ௩-௬. பேடி: "சுரியற் றுடி மருள்படு பூங்குழற், பவளச் செவ்வாய்த் தவள வாணகை, யொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக், கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற், காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை, யகன்ற வல்கு லந்நுண் மருங்கு, லிகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து, வாணன்பேரூர் மறுகிடைத் தோன்றி. நீணில மளந்தோன் மகன்முன் னாடிய, பேடிக் கோலத்துப் பேடு" மணி. ௩: ககசு - உ௫.

(பி - ம்.) * 'தளிரிளமின்னிடை' † 'மன்னர்க்கிறைமொழியிறக்கும்' ‡ 'காட்ட வேலி' § 'முடித்தோன்' ‖ 'பெயர்த்தனன்'

# உஎ.—நீர்ப்படைக்காதை.

ருருஎ

கதிர்செல வொழித்த * கனக மாளிகை

முத்து † நிரைக் கொடித்தொடர் முழுவதும் வளைஇய
சித்திர விதானத்துச் செய்பூங் கைவினை
யிலங்கொளி மணிநிரை யிடையிடை வகுத்த
உ0௫. ‡ விலங்கொளி வயிரமொடு பொலந்தகடு
போகிய

மடையமை செறிவின் வான்பொற் கட்டிற்

புடைதிர டமளியப் பொற்கா § லமளிமிசை
[1] யிணைபுண ரெகினத் ‖ திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப்
படுத்தாங்
உ௪0. கெறிந்துகளங் கொண்ட வியறேர்க் கொற்ற
மறிந்துரை பயின்ற வாயச் செவிலியர்

தோட்டுணை துறந்த துயரீங் கொழிகெனப்
பாட்டொடு தொடுத்துப் பல்யாண்டு
வாழ்த்தச்
[2] சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று
உ௪௫. பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தா
னறுமலர்க் கூந்த ளணி பெறுகென
வமைவிளை தேறன் மாந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் ** காவல் கைவிட
வீங்குபுன முணீஇய வேண்டி வந்த
உ௫0. †† வோங்கியல் யானை தூங்குதுயி லெய்த
வாகை தும்பை வடதிசைச் சூடிய
வேக யானையின் வழியோ நீங்கெனத்

உ0௧. மாளிகை - அந்தப்புரம். கதிர்செலவொழித்தல் - உயர்தல்.

உ0உ. கொடித்தொடர் - சல்லியும் தூக்கும்.

உ0ரு. விலங்கொளி - பக்கமோடுகிற ஒளி. பொலந்தகடு போகிய - ஒழுகிய.

- பொற்றகடு.

உ0௯. துயிலைப்போக்கி.

உ௧௬. கூந்தல் நாளொப்பனைபெறுக. என - என்று சொல்ல.

---

[1]. சிலப். ௬: ௧௬௬; நெடுநல். ௧௩உ; கலி. எஉ.

[2]. "கூனுங் குறளு மூமுங் கூடிய குறுந்தொழி லிளைஞர்". "கூனுங் குறளுங் கொண்டன" (சிலப். உ0: எ, உ௮: ௫௮) பெருங். ப. ௧0௬: உ௫௬ - ௬௩.

(பி - ம்.) * 'தமனியமாளிகை' † 'நிரைத்தொடர் முழுவதும் வளைஇச்' ‡ 'விலங்கொளி............தகடுபோக்கி மடையமை செறிவளைவான பொற்றகட்டிற்' § 'அமளியிணை' || 'இணைமயிர்' ** 'காவலன்' †† 'வாங்குநிலையாளைதூங்குதுயில்'



திறத்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்
குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்
உஉரு. வட்டிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்

[1] கவடி வித்திய கழுதையே ருழவன்
குடவர் கோமான் வந்தா னாளைப்
படுநுகம் பூணாய் பகடே மன்ன
ரடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனுந்
[2] தொடுப்பே ருழவ ரோதைப் பாணியுந்
* தண்ணான் பொருநை யாடுந ரிட்ட
வண்ணமுஞ் சுண்ணமு மலரும் பரந்து
விண்ணுறை விற்போல் விளங்கிய பெருந்துறை
வண்டுண மலர்ந்த மணித்தோட்டுக் குவளை
முண்டகக் கோதையொடு முடித்த † குஞ்சியின்
முருகுவிரி தாமரை முழுமலர் ‡ தோயக்
குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து
வில்லவன் வந்தான் வியன்பே ரிமயத்துப்
பல்லா னிரையொடு படர்குவிர் நீரெனக்
காவல னானிரை நீர்த்துறை § படீஇக்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலை வாலுகத்துக்
குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தங்

---

(உகஅ) காவல்கைவிடுதலாற் (உகக) புனமுண்ணவந்த துயிலெய்தப் (உஉச) பாடிய குறிஞ்சிப்பாடலும்.

(உஉ௦) யானை

உஉஅ. பூணாய் - பூண்டல் செய்வாய். பகடே, விளி.
உஉகூ. வெள்ளணி - பிறந்தநாளொப்பனை.
உ௩0. தொடுப்பே ருழவர் - விளாக்கொண்டு உழுமுழவர்;

[சொல்.
ஏருழவர், ஒரு

உ௩கூ. பல்லானிரை - வடக்கு நின்றும் கொண்டு போந்த நிரை; அவற்ரோடு நீருஞ்சேர்வீர்.

உ௪0. படீஇ - படுத்தி.   உ௪௩. புன்னை - புன்னையிடத்தே.

---

1. பதிற். எ௰; புறநா. க௰, கஙஉ; பு-வெ. உழிஞை. உகூ.

2. தொடுப்பு - விதைப்புமாம்; 'தொடுப்பினுயிரம் வித்தியதுவிளைய' (மதுரை கக); "தந்துநிரைகரைச் சங்குழுதொடுப்பின் முத்துவினைகழனி' மணி. அ: - க. (பி - ம்.) * 'தண்ணம்பொருநை' † 'குஞ்சியன்' ‡ 'தேய' § 'படியாத் தோவலர்'

# உஎ.—நீர்ப்படைக் காதை.

௫௫௧

உ௫. கழங்காடு மகளி ரோதை யாயத்து
வழங்குதொடி முன்கை மலர வேந்தி

வானவன் வந்தான் வளரிள வனமுலை
தோணல * முணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுது மடவீர் யாமெனு
மஞ்சொற் † கிளவிய ரந்தீம் பாணியு
மோர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி
வால்வளை செறிய வலம்புரி வலனெழ
மாலைவெண் குடைக்கீழ் வாகைச் சென்னியன்
வேக யானையின் மீமிசைப் பொலிந்து
[1] குஞ்சர வொழுகையிற் கோநக ரெதிர்கொள
‡ வஞ்சியுட் புகுந்தனன் செங்குட்டுவனென்.

---

(உசகூ) 'ஏந்தி' என்னும் வினையெச்சம் (உசக) எனும்' என்னும் பெயரெச்ச வினையோடு முடிந்தது.

உசஅ. உணீஇய - உண்ணும்படி.

(உசஅ) உண்ணும்படி (உசகூ) பாடுதுமென்க.

பாட்டால் தம்மிடத்து வருவானென்று. (உஉச - ருo) குறிஞ்சி முதலாக

நாலுநிலத்துப் பாணியும் (உருக) ஓர்த்து உறங்காததேவியென்றது நாலுநில

அணிமையுங் கூறிற்று.

(கககூஅ) வடதிசைக்கண் தும்பைத்துறையையும் வாகைத்துறையையும்

முடிவு செய்து (உருக) தன்றேவி (உருஉ) கைவளைசெறிய வலம்புரிமுழங்க (உருங) வாகைச்சென்னியனாய் (உருச) யானைமிசைப்பொலிந்து (உருரு) திருநகரெதிர் கொள்ளத் (கககூ) தானையொடு (உருசு) வஞ்சியிற் புகுந்தானெனக் கூட்டுக.

## உஎ.—நீர்ப்படைக்காதை

முற்றிற்று.



1. "களிறுபல பூட்டி யொழுகை யுய்த்த" பதிற். சச.

(பி - ம்.) * 'உண்ணியதும்பை' † 'ஒளியத்திம்' ‡ 'வஞ்சியிற்'

## இருபத்தெட்டாவது

# நடுகற்காதை.

தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை
மண்ணக * நிழற்செய மறவா ளேந்திய
[1] நிலந்தரு திருவி னெடியோன் † றனது
வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூ
[2] ரொண்டொடித் தடக்கையி னெண்மலர்ப் பலிதூஉய்
[3] வெண்டிரி விளக்க மேந்திய மகளி
ருலக மன்னவன் வாழ்கென் றேத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
[4] போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
‡ வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்தார்
யானை வெண்கோ டுழுத்திய மார்பு
நீள்வேல் கிழித்த நெடும்புண் § ணுகமு
மெய்கணை கிழித்த பகட்டெழி லகலமும்

ஸைவவாள் கிழித்த மணிப்பூண் || மார்பமு

கஙு. மைம்மல ருண்கண் மடந்தைய ரடங்காக்

---

க. தமனிய நெடுங்குடை யென்றது காம்பும் முகப்பும் பொன்னாதலால்.

உ. மறம் - வீரம்.

---

¹. "நிலந்தரு திருவி னெடியோய்" (பதிற். அஉ); "நிலந்தரு திருவி னெடி
யோன்" மதுரை. எசுங.

². இ - அ. "அகநக ரெல்லா மரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப்,
பகன் மாய்ந்த மாலை". (சிலப். கூ: க-ங) என்பதையும் பார்க்க.
அதன் கீழ்க் குறிப்பையும்

³. "கன்னியர் கைவிளக் கேந்தக் காவலன், பொன்னியல் வளநகர் பொலியத் தோன்றினர்" சூளா. சீய. உசச.

⁴. கூ-க0. "வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப், போர்தைக் கண்ணிநி னாங்கனோர்" சிலப். உஅ: கஙங - ச.

(பி - ம்.) * 'கிழற்ற மறவாள்' † 'மூன்று' ‡ 'வேய்ந்துவினை' § 'அகமும்' || 'புய மூமைம்மலர்'

உ அ.—நடுகற் காதை. ருசுக

¹ கொம்மை வரிமுலை வெம்மை *

வேதுநீஇ

† * யகிலுண விரித்த வம்மென் கூந்தன்
முகிலுழை மதியத்து ‡ முரிகருஞ்

சிலைக்கீழ்

மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து

உ0. சிதரரி பரந்த § செழுங்கடைத் தூது
மருந்து மாயதிம் மாலையென் || றேத்த
விருங்கனித் துவர்வா யிளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழுங் காமர் செவ்வியிற்
றிருந்தெயி றரும்பிய விருந்தின் மூரலு
உரு. மாந்தளிர் மேனி ¶ மடவோர் தம்மா
லேந்துபூண் ** மார்பி னிளையோர்க்

களித்துக்

காசறைத் திலகக் கருங்கறை கிடந்த
மாசில்வாண் முகத்து வண்டொடு சுருண்ட
குழலுங் கோதையுங் கோலமுங் காண்மார்
ளo. * நிழல்கான் மண்டிலந் தம்மெதிர் நிறுத்தி
வணர்கோட்டுச் சீறியாழ் †† வாங்குபு தழீஇப்

புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்

குரல்குர லாக வருமுறைப் ‡‡ பாலையிற்

(கசு) உறீஇ (உக) ஏத்தவென்னுமெச்சம், (உச) அரும்பியவென்னும்
பெயரெச்சத் தொழிலோடு முடிந்தன.

(ரு) நெடியோன் (ச) மூதூரில் (அ) வந்த மாலை, (கூ) தெரியல் (கo) வேய்ந்து வாள்வலத்தர் (கக - ச) மார்பை (கரு) மடந்தையர்தம் (கசு) முலையால் வேதுகொண்டு இவருடைய (உ0) கட் கடையாகிய தூது (உக) முன் பாச

றைக்கண் நமக்கு வருத்தஞ் செய்ததேயன்றி இம்மாலைக்கண் அதற்கு மருந்துமாகியதென்று (உசு) இளையர் (உக) ஏத்த (உச) அரும்பியமூரலையும் (உசு) அவ்வினையோர்க்கு (உரு) அம்மடவோராலே (உசு) அளிப்பதுஞ் செய்தென்க.

1. "கொம்மை வருமுலை வெம்மையிற்றடைஇ" (நெடுநல். சுக); "தங்குகேள் வேல்செய்த புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியுஞ், செங்கனி வாய்மருந் தூட்டிவீர் செம்பொனெடுங்கடை திறமினோ" கலிங்க. கடை. நரு.

2. "அகிதுணை விரித்த வம் மென் கூந்தலின்" சிறுபாண். உசுங.

3. உக - ங0. "மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமுந், தேசு மொளியுந் திகழ நோக்கி" பரி. கஉ.

4. "நிழல்கான் மண்டில நோக்கி யழல்புனை, யவிரிழை திருத்து வான்" (பரி-உக); "நிழல்கான்மண்டிலத்து" அகநா. எக.

(பி - ம்.) * 'வெப்துறீஇ' † 'அகிதுணைவிருந்த' ‡ 'மூரிவெஞ்சிலை' § 'கெங்கடைத்தூது' || 'ஏத்தி' ¶ 'மடவோர்தத்தமேந்து' ** 'மார்பினிளியோர்க்கு' †† 'வாங்குபுடைத்தழீஇப்புரிபுரி' ‡‡ 'பாலைதுத்தங்குரலாற்றென்முறைபயக்கி யத்தில்'

றுத்தங் குரலாத் தொன்முறை யியற்கையி
௩௫. னந்தீங் குறிஞ்சி யகவன் * மகளிரின்
மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து
முடிபுற முரிஞ்சுங் கழற்காற் † குட்டுவன்
குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல
வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர்
மதியம்
௪0. பலர்புகழ் ‡ மூதூர்க்குக் காட்டி நீங்க
மைந்தரு மகளிரும் வழிமொழி கேட்ப
வைங்கணை நெடுவே ளரசுவீற் றிருந்த
வெண்ணிலா முன்றிலும் வீழ்பூஞ்
சேக்கையு
மண்ணீட் டரங்கமு மலர்ப்பூம் பந்தரும்
௪௫.

* வெண்கா லமளியும் விதானவே திகைகளுந்
தண்கதிர் மதியந் தான்கடி கொள்ளப்
படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்
திடைநின் றோங்கிய நெடுநிலே மேருவிற்
கொடிமதின் மூதூர் நடுநின் றோங்கிய

௬௦. [a] தமனிய மாளிகைப் புனைமணி யரங்கின்

வதுவை வேண்மாண் மங்கல மடந்தை
மதியேர் வண்ணங் காணிய வருவழி

---

(௬௦) திருத்தித் (௬௧) தழீஇயென் னுமெச்சங்கள், ரென்னும் பெயரில் அகவுதற்றொழிலோடு முடிந்தன.

(௬௫) அகவன்மகளி

(௨௬) போகத்தாற் குலைந்த குழல் முதலியன திருத்திக் காணவேண்டிக்

(௬௦) கண்ணடிபார்த்து (௬௧) யாழைத்தழீஇக் (௬௫) குறிஞ்சியை அகவுதலைச் செய்யும் மகளிராலே (௬௬) மைந்தர்க்கு விருந்தயர்ந்தென்க.

(அ) பலர்தொழ வந்த மலரவிழ் மாலை, (௨௬) இளையோர்க்கு (௨௫) மட வோராலே (௨௪) மூரலையும் (௨௬) அளித்து (௬௬) மைந்தர்க்கு (௬௫) அகவன் மகளிராலே (௬௬) விருந்துமயர்ந்து (௪௦) மூதூரிடத்து (௬௬) மதியத்தைக்

(சo) காட்டி நீங்க, அந்தமதியம் (சரு) வெண்ணிலாமுன்றில் முதலானவற் றை (சசு) விளக்காநிற்க் (ருஉ) அம்மதியத்தெழுச்சியை (ருக) வேண்மாள்(ருஉ) காண்டற்கு வருவழி (ருo) அரங்கின்.........பெற்றன ஒருபக்கமென்க.

---

1. "விதானித்துப் படுத்த வெண்கா லமளி" பெருங். க கூ: கூக.

2. ருo - ருக. "விளங்கில வந்தி வெள்ளி மாடத், திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளி" சிலப். உஅ: ச - ரு.

(பி - ம்.) * 'மகளிர், ஊமந்தர்க் கோக்கிய வருவிருந்தயரமுடி' † 'குடவன்' ‡ 'மூதூர்காட்டியாங்கு'

## உஅ.—நடுகற் காதை. 

[1] யெல்வனை மகளி ரேந்திய * விளக்கம்

பல்லாண் டேத்தப் பரந்தன வொருசார்
மண்கனை முழவும் வணர்கோட் டியாழும்
பண் † கனி பாடலும் பரந்தன வொருசார்
மான்மதச் சாந்தும் வரிவெண் ‡ சாந்துங்

[2] கூனுங் குறளுங் கொண்டன வொருசார்
வண்ணமுஞ் சுண்ணமு § மலர்ப்பூம்
பிணையலும்
[3] பெண்ணணிப் பேடிய ரேந்தின

ரொருசார்
[*] பூவும் புகையு மேவிய விரையுந்
தூவியஞ் || சேக்கை சூழ்ந்தன வொருசா
ராடியு மாடையு மணிதரு கலன்களுஞ்
சேடியர் ¶ செவ்வியி னேந்தின ரொருசா
ராங்கவ டன்னுட னணிமணி யாங்கம்
[5] வீங்குநீர் ஞால மாள்வோ னேறித்

[*] திருநிலைச் சேவடிச் சிலம்புவாய்
புலம்பவும்
[*] பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருள்வுஞ்

சுரு. மணியரங்கம் - நிலாமுற்றம்.

1. "பஞ்சிலங்கு மல்குலார் பலாண்டெட்ற" "தழும்லர்க்கோதை நல்லார் பலாண்டிசை ததும்பவாழ்த்த", "பங்கயமுகத்தவர்பலாண்டிசைபராவ" சூளா. தூது. சுரு; கல்யாண. கசக, உகள.

2. சிலப். உள: உகசு - ஆம் அடியையும் அதன் கீழ்க் குறிப்பையும் பார்க்க.

³. "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" நாலடி. உடுக.

⁴. மூ. "பூவும் புகையு மேவிய விரையும்" சிலப். ஞ: கச; கஉ: கூஅ; ஙo: கஞக.

⁵. "வீங்குநீர் ஞால மாள்வோன்" (சிலப். உக: கoஞ, களக); "வீங்குநீர்ஞால மாள்வோய்" சிலப். உகூ. கஞஞ; மணி. ஞ: கூக.

¹. கூஎ - எஞ. "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப, வுமையவ ளொருதிற னாக வோங்கிய, விமையவ னாடிய கொடுகொட்டி யாடலும்" (சிலப். கூ: சo-சங); "கொட்டி கொடுவிடையோ னாடிற் றதற்குறுப், பொட்டிய நான்கா மெனல்" (டை ங: கசு-மேற்): "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ, கொடுகொட்டி யாடுங்கால்.........கொண்டசீர் தருவாளோ" (கலி. கடவுள்); "கொட்டி யாடற் கேற்ற மொட்டிய, வுமையவ ளொருபா லாக வொருபா, லிமையா நாட்டத் திறைவ னாகி, யமையா வுட்கும் வியப்பும் விழைவும், பொலிவும் பொருந்த நோக்கித் தொக்க, வவுண ரின்னுயி ரிழப்ப வக்களம், பொலிய வாடின னென்ப" டை. டை - மேற்.

(பி - ம்.) * 'விளக்கமொடு பல்யாண் டெத்தப் பரந்தனர்' † 'மணிப்பாடலும்' ‡ 'கல்லவயுங்' § 'மலர்ப்பூம்' || 'சேக்கைத்தந்தனர்' ¶ 'செல்வியின்' ** 'புரிதரு'



¹ செஞ்சடை சென்று திசைமுக
மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை *
யசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழா

துமையவ ளொருதிற னாக வோங்கிய்
எ௫. விமையவ னுடைய † கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
[2] ‡ கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்தவ
னேத்தி நீங்க விருநில மாள்வோன்
§ வேத்தியன் மண்டப மேவிய பின்னர்
அ0. நீலன் முதலிய கஞ்சுக மாக்கண்
மாடல மறையோன் றன்னொடுந் தோன்றி
வாயி லாளரின் மன்னவற் கிசைத்தபின்
கோயின் மாக்களிற் கொற்றவற் றொழுது

தும்பை வெம் || போர்ச் சூழ்கழல்
வேந்தே
அ௫. செம்பியன் மூதூர்ச் சென்றுபுக் காங்கு
[2] வச்சிர மவந்தி மகதமொடு ¶ குழீஇய
சித்திர மண்டபத் திருக்க வேந்த
னமரகத் துடைந்த வாரிய மன்னரொடு
தமரிற் சென்று தகையடி வணங்க

எ௫. கொட்டிச்சேதம் - கொடுகொட்டிக்கூத்து.

எசு - எ. இதனை, பகுத்தலரிய நான்மறையோரது பறையூரிற் கூத்தச்
சாக்கையன் ஆடுதலின் மகிழ்ந்தென்க.

எகூ. வேத்தியன் மண்டபம் - அரசிருப்பாய பேரோலக்கமண்டபம்.

அகூ - எ. வச்சிரம் அவந்தி மகதமொடுதிரண்ட மண்டபம் - இந்நாடு மூன்றுமுடையோர் திறையிட்ட பந்தர் தோரணவாயில் பட்டிமண்டபம், இவைகூடியமண்டபம்;......ஆகலரன், ஆகுபெயர்; பிறந்தவழிக்கூறல்.

அகூ. தமரிற்சென்று - சங்கோசபரிவாரத்துக்குக் கடவாருடன் சென்று.

---

[1], "எண்மிக்களந்துகொண்டனவென்னப், புரிந்த செஞ்சடை நிமிர்ந்து சுழல" கலி. உழைநின்றீரும்"—

[2], சாக்கையரென்னு மொருவகைச்சாதியார் இப்பொழுதும் கூத்துநிகழ்த்தும் தொழிலையுடையராய் மலைநாட்டிலுள்ளாரென்று தெரிகின்றது.

[3], அகூ - எ. "வச்சிரநன்னாட்டுக், கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும், மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன், பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமு, மவந்தி வேந்தனுவந்தனன் கொடுத்த, நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்" சிலப். இ: கூகூ-கoச

(பி - ம்.) * 'இயங்காது' † 'கொடிகொட்டிச்சேதம்' ‡ 'கூத்தைச்சாக்கையோ ருடவின்' § 'வேந்தியன் மண்டபமேறிய' || 'போர்கும்' ¶ 'குழிஇச்சித்திர'

## உ அ.—நடுகற்காதை. ருகூரு

நீளம ரழுவத்து நெடும்பே ராண்மையொடு
வாளுங் குடையு மறக்களத் * தொழித்துக்
[1] கொல்லாக் கோலத் துயிருய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்றெனத்
தலைத்தேர்த் தானைத் தலைவற் குரைத்தனன்
சிலைத்தா ரகலத்துச் செம்பியர் பெருந்தகை
யாங்குநின் றகன்றபி னறக்கோல் வேந்தே

யோங்குசீர் மதுரை மன்னவற் காண
† வாரிய மன்ன ரமர்க்களத் தெடுத்த
[2] சீரியல் வெண்குடைக் ‡ காம்புநனி சிறந்த
௧00. [3] சயந்தன் வடிவிற் றலைக்கோ லாங்குக்
கயந்தலை யானையிற் § கவிகையிற் காட்டி
யிமையச் சிமையத் திருங் || [4] குயி லாலுவத்
துமையொரு பாகத் தொருவனை வணங்கி
[5] யமர்க்கள ¶ மரசன தாகத் துறந்து
௧0௫. [6] தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேற்

---

௯௩. போரிடத்துப் பிடித்துக்கோடல். ௯௭. காண - கண்டவளவிலே.

௧0௨. குயிலாலுவம் - இமவான்பக்கத்து ஒருபகுதி.

(௯௮) ஆரியமன்னரென்னுந் தொகுதி யொற்றுமைபற்றிக் (௧0௪)காட்டி (௧0௩) வணங்கிக் (௧0௫) கொண்டோரெனச் சிலர்வினை வேறுசிலர்வினையொடு முடிந்தது.

[1], "சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர், பிடிகைப்பீலிப் பெருநோன்பாளர்", "தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த, மாபெருந் தானை மன்னகுமரர்", "தவப் பெருங்கோலங்கொண்டோர்" சிலப். உசு: உஉ௫ - சு; உஎ: கஎகூ-அ௦; உஅ: ச௦௫.

[2]. கூஅ - கூ. "பேரிசைமன்னர் பெயர்புறத் தெடுத்த, சீரியல் வெண்குடைக் காம்புநனிகொண்டு" சிலப். ௬: கககூ - ௫.

[3]. "தெய்வ மால்வரைத் திருமுனியருள, வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு, தலைக்கோற் றனத்துச்சாபம்", "மன்னவன் கோயி, லிந்திர சிறுவன் சயந்தனுகென" சிலப். ௩: க-௩; கககூ.

[4]. நீலகேசி. மொக்கலவாதச்சருக்கம் கூ௦ - ஆம் பாட்டுரையில், 'குயிலாலபுரம்' என்று ஓரிடப்பெயர் காணப்படுகின்றது.

[5]. "தேன்மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்தது" (சீவக. உஎக) என்பதையும், "இத்துணையும் இவன் வெற்றியாதலின் இவன் களம் என்றார்" என்னும் அதன் விசேடவுரையையும், "ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால், வென்று களங்கொண்ட வேல்வேந்தே" (பு—வெ. கூ: கஎ.) என்பதையும்பார்க்க.

[6]. இக்காதையின் கூஉ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.) * 'ஒளித்து' †. 'ஆரியமாக்களமர்' ‡ 'காம்பினித்சிறந்த' § 'கவிகை காட்ட' || 'கயிலாயத்து' ¶ 'அரசரசுக்தரந்து'



கொற்றம்
கொடியழற் சீற்றங் கொண்டோன்
கொற்றம்
புதுவ தென்றனன் போர்வேற்
செழியனென்

றேனை மன்ன ரிருவருங் கூறிய
நீண்மொழி யெல்லா நீலன் கூறத்

தாமரைச் செங்கண் டழனிறங் கொள்ளக்
கோமக னகுதலுங் குறையாக் கேள்வி
மாடல னெழுந்து மன்னவர் மன்னே
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென் றேத்திக்
கறிவளர் சிலம்பிற் றுஞ்சும் யானையிற்
சிறுகுரா னெய்தல் * வியலூ ரெறிந்தபி

[1] ஞர்புனை தெரிய லொன்பது மன்னரை
நேரி வாயி னிலைச்செரு வென்று
நெடுந்தேர்த் தானையொ † டிடும்பிற்புறத் திறுத்துக்
கொடும்போர் கடந்து [2] நெடுங்கட லோட்டி
யுடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக்

கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்
நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே

கூஅ - க0எ. ஆரியமன்னர் அமர்க்களத்தில்
தங்களுக்கெடுத்த குடையிற்
காம்பைக் கையிலே பிடித்து ஆனைக்கழுத்திலிருத்திய
ஆசிரியன் கையில்
தலைக்கோலாகக் காட்டியும்,
குயிலாலுவமென்னும்.................அமர்க்களம்
அரசனதாகத் துறந்தும், தவப்பெருங்கோலங்
கொண்டாராயினர் தம்மேற்
சீற்றங்கொண்டோன் கொற்றம் புதிதென்றான்.

ககச - ரு. யானையினையுடைய வியலூர்.
ககஎ. நேரிவாயில் - உறையூர்த் தெற்கில்வாயிலதோரூர்.
கஉ0. ஆரியமன்னரென்றது-முன்னொருகால் இவனுக்குத் தோற்றார்சிலர்.

---

1. ககக - எ. "தின் மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா, வொத்த பண்பின ரொன்பது மன்ன, ரிளவரசு பொறாஅ ரேவல் கேளார், வளநா டழிக்கு மாண்பின ராதலி, னொன்பது குடையு மொருபக லொழித்தவன், பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்" சிலப். உஎ. ககஎ - உரு.

2. ககக - உக. "மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு, பொங்கிரும்பரப்பிற் கடல்பிறக் கோட்டிக், கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய, செங்குட்டுவன்" (சிலப். ௩0. கட்டுரை, கக - ௫); "கோடுநரல் பௌவங் கலங்க வேலிட், டுடைதிரைப்

பரப்பிற் படிகட லோட்டிய, வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்", "கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக், கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ" (பதிற். சகூ, சஅ); "மட்டவிழ்தெரியன் மறப்போர்க் குட்டுவன்......செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி யோங்குதிரைப் பௌவ நீங்க வோட்டிய, நீர்மா ணெஃக நிறத்துச் சென்றழுந்த" (அகநா. உஉஉ); புறநா: ருகூகூ - ஆம்பாட்டிலும் இக்கருத்து வந்துள்ளது.

(பி - ம்.) * 'வீயலூர்' † 'இடும்பியாத்தியத்துக்கடம்போர்'

# உஅ.—நடுகற்காதை.

ருசுஎ

புரையோர் * தம்மொடு பொருந்த

வுணர்ந்த

வரைச ரேறே யமைகநின் சீற்ற
மண்ணாள் வேந்தே † நின் [1] வா ணாட்க
[2] டண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க
வகழ்கட ன்ஞால மாள்வோய் வாழி

யிகழா தென்சொற் கேட்டல் வேண்டும்
வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னு
மறக்கள வேள்வி செய்யா தியாங்கணு

மறக்கள வேள்வி செய்வோ யாயினை

[3] வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப்

போந்தைக் கண்ணிநி † ஞூங்கணோர்
மருங்கிற்

கஙரு. [4] கடற்கடம் பெறிந்த காவல ஞயினும்

விடர்ச்சிலை பொறித்த விறலோ ஞயினு

[5] நான்மறை யாளன் செய்யுட் கொண்டு

மேனிலை யுலகம் § விடுத்தோ ஞயினும்

போற்றி மன்னுயிர் || முறையிற்
கொள்கெனக்

கசo. கூற்றுவரை நிறுத்த கொற்றவ ஞயினும்
[6] வன்சொல் யவனர் வளநா டாண்டு

பொன்படு நெடுவரை புகுந்தோ ஞயினு

கஉந. புரையோர் - உயர்ந்தோர்.

[1] "நீ, நீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர், வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக், கடுவளி தொகுப்ப வீண்டிய, வடுவா ழெக்கர் மணலினும் பலவே" புறநா. ருரு.

[2] ஆன்பொருநை—சேரநாட்டிலுள்ள தொருநதி; இஃது ஆன்பொருந்தமெனவும் வழங்கும்; "வாழிவருபுனனீரான்பொருநை சூழ்தரும் வஞ்சியார் கோமான்" சிலப். உக; "மலையமரையன்"—பதிற்றுப்பத்தில் ௩௦ - ஆம் செய்யுளின் உரையைப் பார்க்க; "தண்ணான்பொருனை மணலினும் பலவே" (அகநா. கூக.); "தண்பொருனைப், புனல்பாயும், விண்பொருபுகழ் விறல்வஞ்சி", "தண்ணான் பொருனை வெண்மணல்" "வஞ்சிப் புறமதி லலைக்குங் கல்லென் பொருனை" (புறநா. கக, நசு, நஅஎ) "ஆன் பொருனையும் வையையும் போலும் யாற்றிலும்" தொல் - கற்பு. சூ. ௩௦ - ந.

[3] கநந - ச. சிலப்பதிகாரம், உஅ: கூ - க௦.

[4] சிலப்பதிகாரம் உந: அக - உ; உரு: க - உ ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க; "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை, விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" மணி. உஅ: க௦ந - ச.

[5] சிலப்பதிகாரம், உந: கசு - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

[6] "வன்சொல் யவனர்வள நாடு வண்பெருங்கல், தென்குமரியாண்ட" சிலப். உக.

(பி - ம்.) * 'தம்மொழி பொருந்தா துணர்ந்த' † 'நீநின்வாழ்நாட்கண்ணூர் பொருனை' ‡ 'வடங்களூர் மருங்கும்' § 'கொடுத்தோன்' || 'முறைமையிற்'



* மிகப்பெருந் தானையோ டிருஞ்செரு
வோட்டி
[1] யகப்பா வெறிந்த வருந்திற லாயினு

கஎரு. முருகெழு மரபி [2] னயிரை மண்ணி

யிருகட னீரு மாடினோ னாயினுஞ்

சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினு

மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்

யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் †
மருங்கிற்
செல்வ நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமி ழிகழ்ந்த வாரிய மன்னரிற்

கண்டனை யல்லையோ காவல் வேந்தே
யிளமை நில்லா தென்பதை யெடுத்தீங்
‡ குணர்வுடை மாக்க ளுரைக்கல்
வேண்டா
திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே

நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவி னெய்திய நல்லுயிர்

கசுo. மண்மேனு ருருவின் § மறிக்கினு மறிக்கு

மக்கள் யாக்கை பூண்ட || மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்

விலங்கின் யாக்கை ¶ விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணு
கசுடு. [1] மாடும் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது

கசு௲.

கசுஎ.

கசுகூ.

அயிரை - ஓர்யாறு. அதிலே குளித்து.
சதுக்கப்பூதர் - அமராபதியிற் பூதங்கள்.
மீக்கூற்றாளர் - மேற்பட்ட வார்த்தையையுடையவர்கள்.

---

[1]. "அண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த,
பொன்புனை யுழிஞை வெல் போர்க் குட்டுவ" (பதிற். உஉ);
துட்பதிகம்.
"அகப்பா வெறிந்து பகற்றீவேட்டு" டி ந-ஆம்பத்

[2]. அயிஷரயை ஒருமலையென்றுங் கூறுவர்; "இருகட
னீரு மொருபக லாடி, யயி

ரை பரைஇ" (பதிற். கூ-ஆம் பத்துப் பதிகம்); "கடவு
ளயிரையி னிலைஇ" "உருகெழு

மரபி னயிரை பரைஇ,', "உருகெழு மரபி னயிரை பரவி" ஷ. எகூ, அஅ, கூ0.

[2]. கசுடு - கூ. "ஆடுகூத்த ரணியே போல, வேற்றோ ரணியொடு வந்தீரோவென'
முனி, கட: ருக - உ.

(பி - ம்.) * 'மிகற்பெரும்' † 'மருங்கு' ‡ 'உரனுடைமாக்களுரைக்கவேண்டா'
§ 'மிகிக்குமமதிக்கும்' || 'இவ்வுயிர்மிக்கோர்' ¶ 'எய்துமிவ்வுயிர்'

## உஅ.—நடுகற்காதை. 

[1] செய்வினை * வழித்தா யுயிர்செலு
மென்பது
[2] பொய்யில் காட்சியோர் பொருளுரை
யாதலி
[3] னெழுமுடி மார்பநீ யேந்திய திகிரி
வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே
யரும்பொருட் † பரிசிலே னல்லே
னியானும்
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை யுலகத் [4] துயிர்போகு
பொதுநெறி [5] புலவரை யிறந்தோய்

போகுதல் ‡ பொறேஎன்

களரு. வானவர் போற்றும் வழிநினைக் களிக்கு

நான்மறை § மருங்கின் வேள்விப் பார்ப்பா

‖ னருமறை மருங்கி னரசர்க் கோங்கிய

பெருநல் வேள்வி நீசெயல் வேண்டு

---

கசு அ. பொருளுரை - மெய்யுரை.

கசுகு. எழுமுடி - எழுமுடியாற் செய்த ஆரம்.

களக. பொருள்

லுற்றேனல்லேன்.

பரிசிலாக வருவேனல்லேன்; அதுகாரணமாகச் சொல்ல

களங. பொதுநெறி - பிறந்திறப்போரெல்லாரும் போம்வழி.

களச. [5] புலவரையிறந்தோய் - அறிவெல்லை கடந்தோய்.

களரு. வானவர் போற்றும்வழி - மோட்சமார்க்கம்.

(களரு) அளிக்கும் (களசு) வேள்விப்பார்ப்பானென்க.

களஅ. வேள்வி - இராசசூயம்.

---

1. கசுஎ - அ, "ஐய முண்டோ வாருயிர் போனூற், செய்வினை மருங்கிற் சென்று பிறப் பெய்துதல்" மணி. கூ: கஙஅ - கூ.

5. "பொய்யில் புலவன் பொருளுரை" மணி. உஉ: கூக.

[3]. "எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து, நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை", "எழுமுடி கெழீஇய திருமஞெம ரகலத்துப், புரையோர்", "எழுமுடி மார்பி னெய்திய சேரல்" (பதிற். கச, கசு - சுக.) என்பவற்றாலும், 'எழுமுடியென்பது, அரசரைவென்று அவர்கள் எழுமுடியாலுஞ் செய்ததோராரமாம்' (பதிற். கச - உரை) என்பதனாலுமுணர்க.

[4]. "உயிர்வழங்கு பெருநெறி" மணி. கஉ: கூஉ.

[5]. "புலவரை யிறந்த புகார்" மணி. இ: கoக.

(பி - ம்.) * 'வழியே, வழிவழிசிறக்கவாய்வான்' † 'பரிசிலல்லேன் யானுன் பெரும்பெயர்' ‡ 'போற்றேன்' § 'மரபின் வேள்வி' ‖ 'அருமறை மரபினைச்சக்கேர்க்கிய'





[1] நாளைச் செய்குவ * மறமெனி னின்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கு
மிதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
வேள்விக் கிழத்தி யிவளொடுங் கூடித்
[2] தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற
[3] ஊழியோ டூழி யுலகங் காத்து
† நீடுவா ழியரோ நெடுந்தகை யென்று
மறையோன் மறைநா ‡ வுழுது
வான்பொரு
ளிறையோன் செவிசெறு வாக வித்தலின்

வித்திய பெரும்பதம் விளைந்துபத
மிகுத்துத்
கஅ௰. துய்த்தல் வேட்கையிற் சூழ்கழல் வேந்த
ஞன்மறை மரபி னயந்தெரி நாவிற்
கேள்வி முடித்த வேள்வி மாக்களை
மாடல மறையோன் சொல்லிய
முறைமையின்
§ வேள்விச் சாந்தியின் விழாக்கொள வேவி

கஅரு. யாரிய || வரசரை யருஞ்சிறை நீக்கிப்
* பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ் ¶ நீர் வேலித் தண்மலர்ப்
பூம்பொழில்
** வேளா விக்கோ மாளிகை காட்டி
††நன்பெரு வேள்வி ‡‡ முடித்ததற்
பின்னாட்

---

...........ஆரியமன்னர்க்காட்டி விடுதலீருய்.......

கஅ௦. கேள்வியளவேயான நல்லுயிர்.

கஅஉ. உலகில் ஓரிடத்திலுமில்லை.

கஅ௫. வேள்விக்கிழத்தி - வேண்மாள்.

கஅ௬. பதம் - உணவு.

கஅ௭. வேளாவிக்கோமாளிகை - வேள்ஆவிக்கோம ந்திரம்.

---

---

[1]. 'சாலச்செய்

வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச்,சாலச்செய் வாரே தலைப் படுவார் - மாலைக், கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொ, லறங்காலைச் செய்யாத வாறு" அறநெறி. ௬௯.

[2]. "தாழ்கழன் மன்னர் தன்னடி போற்ற" சிலப். ௩0: கஅ௬.

[3]. சிலப்பதிகாரம், ௩0: க௫௫ - க.

[4]. க௯௬ - அ. புறநானூறு, க௩ - அவதாரிகை

(பி - ம்.) * 'அறனென் றென்னைற், கேள்வி யின்னுயிர் நீங்கென நீங்கும்' † 'நீவா ழியரோ' ‡ 'உழுதவான்' § 'வேட்கைச் சாந்தியின் விழாக்கோன் செய்கென' ‖ 'அரச ருருஞ்சிறை' ¶ 'நீர்க் கேணி' ** 'வேள்விக் கான மாளிகை கட்டி' †† 'நம்பெரு' ‡‡ 'முடித்தபின்னுட்'

## உ௮.—நடுகற் காதை.

நிஎக

உ00. டம்பெரு நெடுநகர்ச் சார்வதுஞ் *

சொல்லியம்
மன்னவர்க் கேற்பன செய்க நீயென
வில்லவன் கோதையை விருப்புட
னேவிச்
[1] சிறையோர் கோட்டஞ் † சீமின்
யாங்கணும்
கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மென

[2] வழும்பில் வேளோ டாயக் கணக்கரை
முழங்குநீர் வேலி மூதூ ரேவி
[3] யருந்திற ‡ லரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்
பண்டையோ ருரைத்த § தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேத்தும் பத்தினி யாகலி
னார்புனை சென்னி யரசற் களித்துச்
[4] செங்கோல் வளைய வுயிர்வா ழாமை
தென்புலங் காவன் மன்னவற் களித்து
வஞ்சினம் வாய்த்தபி னல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்த || ரென்பதை
வடதிசை மருங்கின் மன்னவ ரறியக்
குடதிசை ¶ வாழுங் கொற்றவற் களித்து
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
[5] கொதியழற் சீற்றங் கொங்கையின் ** விளைத்து
நன்னா டணைந்து †† நளிர்சினை வேங்கைப்

பொன்னணி புதுமிழற் பொருந்திய நங்கையை

யறக்களத் தந்தண ராசான் பெருங்கணி

---

(௧௯௪) விழாக்கொளவேவி (௨௧௨) வில்லவன்கோதையையேவியென்க. ௨௦௫ - ௬. அழும்பில்வேள்........மூதூர்களிலே இப்படிச்செய்யுமென்று ஏவியென்க. ௨௨௨. ஆசான் - புரோகிதன்.

---

[1] "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதும், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்" (சிலப். ௨௩: ௧௨௬ - எ); "கறையோ ரில்லாச் சிறையோர் கோட்டம்" (மணி. ௧௯: ௧௬௩;) "தம்பியை முகத்துநோக்கி, யூர்பிணிகோட்டஞ் சிப்பித் தருதவ ஞண்டநாட்டைப், பார்பிணிகறையினீங்கப் படாமுரசறைவியென்றான்" சீவக. ௨௩௭௨.

[2] சிலப். ௨௫: ௧௭௭; "விளங்குபெருந் திருவின் மான விறல்வே, ளழும்பில்" மதுரை. ௧௪௪-௫.

[3] மர்தவர் நோன்பு மடவார் கற்பும், காவலன் காவ லின்றெனி லின்றால்" மணி: ௨௨: ௨௦௮ - ௯; குறள், ௫௪௧ - பரிமேல். விசேடவுரையைப்பார்க்க.

[4] "செங்கோல் வளைய வுயிர்வாழார் பாண்டியர்" சிலப். ௨௰.

[5] சிலப்பதிகாரம், பதிகம், ௪௪.

(பி - ம்.) * சொல்வி மன்னியநற் கொட்பன செய்க நீரென' † 'சீமி னெங்கணுங் கறைகெழு நல்லூர்க்' ‡ 'அரசன்' § 'தண்டா நல்லுரைப்' || 'என்பது' ¶ 'அரும்' ** 'வீழ்த்து' †† 'தனிசிலை'



சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழையு நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்
திமையவ ருறையு மிமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் * தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய [1] தெய்வப் படிமத்து

[1] வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
௨௯ 0. முற்றிழை † நன்கல முழுவதும் பூட்டிப்
[2] பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி
[4] வேள்வியும் விழாவு நாடொறும் வகுத்துக்
[5] கடவுண் மங்கலஞ் செய்கென வேவினன்
[6] வடதிசை வணக்கிய மன்னவ ரேறென்.

உ அ.—நடுகற்காதை

முற்றிற்று.



---

௨௨௪. நூனெறிமாக்கள் - ‡ தபதிகள்.

(௨௨௪) இவர் (௨௨௨ - ௯) அந்தணர்
முதலாயினரோடு சென்று (௨௨௫)
வகுத்த பத்தினிக்கோயிலில் (௨௨அ) கைத்தொழின்
மிகுத்த படிமத்திலே
(௨௯0) ஆபரணங்கள் பூட்டி.

௨௯௧. பூப்பலி - அருச்சனை.
கடைவாயிலினிறுத்தி.

காப்பு - திக்கிற்றேவதைகள்; கடைநிறுத்தி-

